கவிஞர் இ.முத்தெழிலனின்

# வைரமலர்கள்




MAX



கவிதை தொகுப்பு

# வைரமலர்கள்

கவிஞர் இ.முத்தெழிலன்

பதிப்பாளர்:

எ. ஆரோக்கிய மேரி
பனிமலர் பதிப்பகம்,
219, 6வது தெரு,
ஸ்ரீ அய்யப்பா நகர்,
சென்னை - 600 111.




| | | |
|---|---|---|
| தலைப்பு | : | "வைர மலர்கள்" |
| ஆசிரியர் | : | முனைவர் கவிஞர் இ.முத்தெழிலன் |
| பொருள் | : | கவிதைகள் |
| பதிப்பு | : | முதலாவது பதிப்பு |
| வெளியீடு | : | நவம்பர் 1995 |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| பயன்படுத்திய தாள் | : | வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 14 செ.மீ. x 20 செ.மீ. |
| பக்கங்கள் | : | 104 பக்கங்கள் |
| படிகள் | : | 2000 |
| அச்சுக்கோர்வை | : | மாஸ் டைப்போகிராஃபிக், சென்னை-18 போன்: 455208 |
| முகப்பு அட்டை | : | ரவி ராஜா ஸ்கிரீன்ஸ், சென்னை-17. |
| ஓவியம் வடிவமைப்பு | : | ஓவியர் மேக்ஸ், சென்னை-17. |
| அச்சிட்டோர் | : | மீரா ஆப்செட், சென்னை-14. |
| புகைப்படங்கள் உதவி | : | சித்ரா சாமிநாதன் |
| விலை | : | ரூ. 30/- |

| | | |
|---|---|---|
| புனைப்பெயர் | : | கவிஞர் இ.முத்தெழிலன் |
| இயற்பெயர் | : | முனைவர் ஐ.அந்தோணி முத்து<br>**M.A., Ph.D., FCGA., D.Litt. (USA)** |
| பெற்றோர் | : | ஞா.இன்னாசிமுத்து<br>(சுயமரியாதை இயக்கத்தில் தீவிர பங்கேற்றவர். முதல் உலகப் போரில் பங்கேற்றவர்.)<br>ஆரோக்கிய மேரி. |
| இலக்கிய சேவைக்கான விருதுகளை பல்வேறு நிகழ்ச்சிகளில் வழங்கியவர்கள் | : | 1. மாண்புமிகு மத்திய அமைச்சர் மன்மோகன்சிங் (நிதி) 1994<br>2. மாண்புமிகு மத்திய அமைச்சர் சாந்தாராம் பொதுகே (நிதி, மாநிலம்) 1992<br>3. மாண்புமிகு மத்திய அமைச்சர் சிமன்பாய் மேத்தா (1990)<br>4. மாண்புமிகு தமிழக அமைச்சர் பேராசிரியர் அன்பழகன் (விஜிபி-சந்தனம்மாள் அறக்கட்டளை விருது)<br>5. திருமிகு கே.சி.பந்த் (மத்திய நிதிக்குழு தலைவர்) 1993<br>6. திருமிகு ஆர்.என்.மல்கோத்ரா (மத்திய ரிசர்வ் வங்கி கவர்னர்) 1990<br>7. மாண்புமிகு முன்னாள் கவர்னர் சி.சுப்பிரமணியம் (1994)<br>8. மாண்புமிகு அமைச்சர் டாக்டர் டத்தோ ஸ்ரீ சாமிவேலு (மலேசியா) 1992<br>9. திருமிகு சி.பா.ஆதித்தனார் (இளந்தமிழர் மன்றம்) |
| சென்றுவந்த வெளிநாடுகள் | : | ரோம் (இத்தாலி), பிரான்சு, துபாய், தாய்லாந்து, சிங்கப்பூர், மலேசியா. |
| தலைவர் | : | உலகத் தமிழர் ஒன்றிய கலை இலக்கியப் பேரவை, சென்னை. |
| சிறப்பாசிரியர் | : | ''பனிமலர்'' (தமிழ் மாத இதழ்) |

தொலைபேசி : 451009
454040

# திராவிட முன்னேற்றக் கழகம்

தலைவர் :
மு. கருணாநிதி

" அண்ணா அறிவாலயம் "
268-269, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை,
சென்னை - 600 018.

## அணிந்துரை

கவிஞர் முத்தெழிலன் அவர்கள் அவ்வப்போது இயற்றிய கவிதைகளில் முத்தான சிலவற்றை எடுத்துத் தொகுத்து நூலாக்கி "வைர மலர்கள்" என்று பெயர் சூட்டி தமிழ்ச் சமுதாயத்துக்குப் படைத்துள்ளார்.

இவரது கவிதைகளில் மொழிப்பற்றினை முழுவீச்சில் காணலாம். இனப்பற்றினை இடியோசையாகக் கேட்கலாம். சமுதாய நல உணர்வினை அறியலாம்.

இவரது கவிதைகளின் மூலமாக ஆன்மீக ஒருமைப் பாட்டினை அறிந்துகொள்ள முடிகிறது. சாதிவேற்றுமைகளைத் தகர்க்கும் போக்கினைப் புரிந்துகொள்ள முடிகிறது. சீர்திருத்தச் சிந்தனைகள் பளிச்சிடும் பாங்கினைப் பார்க்க முடிகிறது.

இவரது கவிதைகளில் பலம் வாய்ந்த கவிதைக் குதிரைகளின் பாய்ச்சலைப் பார்க்க முடிகிறது.

இவரது கவிதைகள் எளிமையான சொற்களை ஏந்தி நிற்கின்றன. வளமான கற்பனைகளை வாரி வழங்குகின்றன.

இதுகாறும் இவர் படைத்துள்ள தமிழ்க் கவிதைகளுக்காக பல்வேறு இடங்களிலிருந்து இவரைத் தேடி விருதுகள் வந்துள்ளன.



நண்பர் கவிஞர் முத்தெழிலன் அவர்கள் தமிழ்த்தாய்க்கு மேலும் பல முத்தாரங்களைச் சூட்டி, பெருமையடைய வேண்டுமென்று வாழ்த்துகின்றேன்; பாராட்டுகின்றேன்.

S

**G.K.MOOPANAR**
MEMBER OF PARLIAMENT
(RAJYA SABHA)



20, WESTERN COURT,
JANPATH, NEW DELHI-110001
PH.: 3324243

41, LUZ AVENUE, MYLAPORE,
MADRAS-600 004
PH.: 4991901

Date: 18/10/95

''வைர மலர்கள்'' என்ற இக்கவிதை தொகுப்பில் 'உலகம் நம்பிடும் நாள் வரையில்' தொடங்கி ''ஒற்றுமை எங்கே'' வரை 64 கவிதைகள் (பெரிதும் சிறிதுமாக, மரபும் புதுசுமாக) இடம் பெற்றுள்ளன.

மத்திய அரசுப் பணிகளுக்கிடையே, கிட்டிய நேரத்தை வெட்டிப் பொழுதாக்கிடாமல் பேச்சாலும் எழுத்தாலும் முத்தமிழ் பணிபுரியும் நண்பர் முத்தெழிலனின் கவிதைகள் முத்தானவை; சத்தானவை, இனிமையானவை இளைஞர்களுக்கு விழிப்புணர்ச்சி ஊட்டுபவை, எத்தரப்பாலும் போற்றத்தக்கவை.

கவிஞர் முத்தெழிலனுக்கு என் மொத்தப் பாராட்டுக்கள்.

'அகல உழுதலைவிட ஆழ உழுதலே நன்று' இப்பழமொழி பண்ணைத் தொழிலுக்கு மட்டுமல்ல, பாட்டுத் (கவிதை) தொழிலுக்கும் பொருந்தும். முத்தெழிலனின் கவிதைகளில் வெறும் வார்த்தை வெடிகள், வாண வேடிக்கைகள் போன்ற ஆடம்பர ''அகலங்கள்'' இல்லை. ஆனால் ஆழம் உண்டு. அதிலும் சமுதாய ஏக்கங்கள், எதிர்பார்ப்புக்கள் நிறையவே அறுவடைக்காக காத்துக்கிடக்கின்றன.



மொத்தத்தில் தமிழ்ப்பற்றும், தமிழ் இனப்பற்றும் மின்னி மின்னி பளிச்சிடுகின்ற ''வைரமலர்கள்'' தாம் முத்தெழிலனின் கவிதைகள் என்றால் அவை உண்மை; வெறும் புகழ்ச்சி அல்ல.

[signature]

V

வெ. வைத்திலிங்கம்
முதலமைச்சர்
எண். 26/முதலமைச்சர்/95



புதுவை
நாள்.. 19-10-1..

புதுவை

# அணிந்துரை

கவிஞர் இ.முத்தெழிலனின் 'வைர மலர்கள்' எனும் கவிதை நூலைப் படித்துப் பார்த்தேன். 'உலகம் நம்பிடும் நாள்வரையில்' முதல் 'ஒற்றுமை எங்கே' வரை உள்ள அனைத்துக் கவிதைகளும் நெஞ்சில் நிலைத்த கவிதைகளாக உள்ளன. தனது உள்ளத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்தியிருக்கும் கவிஞர் முத்தெழிலன் 'Poetry is the Spontaneous over flow of power feelings' என்ற கவிதையின் ஆங்கில இலக்கணத்திற்கு ஏற்ப கவிதைகளைப் படைத்திருக்கிறார். சமுதாயத்தைப் பல்வேறு கோணங்களில் தம் கவிதைகளால் பார்த்திருக்கிறார் கவிஞர்.

சாதியையும் மதத்தையும் சாடுகின்ற கவிஞர்

''மதம் வெறியாகி வெடிகுண்டுகளோடு நிற்கின்றது
சாதிகள் கொழுந்து விட்டெரிய சமயம் பார்க்கிறது''

என்ற வரிகளின் மூலம் மதவெறியையும், சாதி வெறியையும் தாக்குகின்றார்.

மன ஆசைகளைப் பற்றிக் கவிஞர் பாடும்போது

''மனதுக்குள் ஆசை வந்தால்
மதிகெட்டுப் போகும் முன்னால்
தனதென்ற எண்ணம் தோன்றும்
தானென்ற மமதை பிறக்கும்''

என்று கூறுகிறார்.

'மனனெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை யூன்றி
சினனெனும் சரக்கை யேற்றி
செறிகடல் ஓடும் போது'

எனும் அப்பர் தேவாரத்தைக் கவிஞர் நினைவுக்குக் கொண்டு வருகிறார். சுருங்கக் கூறினால் இவருடைய ஒவ்வொரு கவிதையும் ஒவ்வொரு வைரம். பட்டை தீட்டப்பட்ட இவ்வைரங்கள் படிப்பவர் மனத்தைக் கொள்ளை கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

கவிஞர் முத்தெழிலன் இவைபோன்ற கன்னித் தமிழ்க் கவிதைகளைக் காலமெல்லாம் படைத்து தமிழன்னையின் மகுடத்திற்கு ஒளியைச் சேர்க்க வேண்டுமென்று வாழ்த்தி அவர் பணி மென்மேலும் சிறக்க வேண்டுமென்றும் வாழ்த்துகிறேன்.

அன்புடன்,

V. Vaithy

(வெ.வைத்திலிங்கம்)

முதலமைச்சர்



முல்லைச்சரம்
(பல்சுவை மாத இதழ்)

43, Duraiswamy Gramani Road,
Vadapalani, Madras - 600 026.
Phone: 483 31 78

ஆசிரியர் - கவிஞர் பொன்னடியான்
(புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் மாணவர்)

# ஒளிமுகங் காட்டும் உண்மைக் கவிஞர் முத்தெழிலன்

'வைர மலர்கள்' நம் மனத்தின் வசீய மலர்கள்; இதயத்தை ஈர்க்கும் இனிய மலர்கள்; எழுச்சிக் கனலை மூட்டும் எண்ண மலர்கள்; இன்பத்தமிழ் அமுதை ஊட்டும் அன்பு மலர்கள் என்று இயம்பினால் மிகை என்று எவரும் கூறிவிட முடியாது.

கவிஞர் முத்தெழிலன் தமிழ்க்கவிதை உலகில் சொத்தெழிலனாக விளங்குபவர்களில் குறிப்பிடத்தக்கவர். இவர் படைப்புகள் வளமை, இனிமை, புதுமை என்னும் ஏற்றமிகு தகுதி முத்திரைகளை எப்போதும் பெறத் தவறுவதில்லை. பல்லாண்டுகளாக பைந்தமிழ்க் கவிதை உலகில் பாடி, வெற்றி உலாவரும் இந்தப்பாட்டுப் பறவையின் படைப்புகள் படிப்போரின் இதயத்தைக் கவர்ந்திழுக்கும் ஆற்றல் பெற்றனவாக இருந்துள்ளன என்பதற்கு அவரின் இந்த வைரமலர்கள் கவிதைத் தொகுப்பே நல்லதொரு சான்றாக விளங்குகின்றது.

பாரதிக்குப் பிறகு, பாவேந்தருக்கு பிறகு தமிழ்க் கவிதை உலகமே கட்டுண்டு கிடக்கிறது. இருளில் இறுமிக் கொண்டிருக்கிறது என்று கதைக்கும் பழைய பெருச்சாளிகளை மேடைகளில் இன்றைக்கும் நாம் பார்க்க முடிகிறது. பழமையையும் புரிந்துக் கொள்ளாமல், புதுமையையும் அறிந்துக் கொள்ளாமல் மேடை நாடாகமாடும் அந்த நச்சரவுகள் இன்றைய தமிழ்க் கவிதை உலகின் உண்மை வளர்ச்சிகளை, புதுமைப் போக்குகளை அறிந்தும், அறியாதவராக வாழும் வம்படிக்காரர்களே! அந்த இருபெரும் மகாகவிகளின் வழியில் எண்ணற்ற கவிதை மேதைகள் தமிழகத்தில் தோன்றி தங்களது தரமான படைப்புகளைத் தமிழன்னையின் திருவடிகளில் படைத்துத் தொண்டு செய்து கிடக்கின்றனர். அத்தகைய மதிப்புயர் கவிஞர்களில் முன்னணிக் கவிஞராக முகம் காட்டும் கவிஞர் முத்தெழிலனின் இக்கவிதைத் தொகுப்பு நூல் தமிழ்க்

கவிதை உலகம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டிருக்கிறது என்பதற்கு மற்றும் ஒரு சான்றாக மலர்ந்து மணம் வீசுகின்றது.

தன்னை ஈன்ற தாய்த் திருநாட்டின் மேன்மைகளுக்கும், தாய்மொழியின் பெருமைகளுக்கும் பாடாத கவிஞன் ஒரு கவிஞன் இல்லை. கண்முன் நடக்கும் கொடுமைகளைக் கண்டும் கொதித்துக் குமுறாத ஒரு பாவலன் பாவலனே இல்லை. எதிர்காலத்தின் ஏற்றங்களுக்கும், புதிய சமூகத்தின் மலர்ச்சிகளுக்கும், குரல் கொடுக்காத புலவன் ஒரு புலவனே இல்லை.

'நம் நாடு நமதென்ற எண்ணம்! - உன்னை
நிமிர்ந்தெழவே செய்வதிங்குத் திண்ணம்!
சும்மா நீ கதை பேசல் வேண்டாம்! - தம்பி
சூளுரைத்துச் செயலாற்றல் வேண்டும்!

உறவுக்குக் கைநீட்ட வேண்டும் - நம்மின்
உரிமைக்குக் குரல் கொடுக்க வேண்டும்!
நறவுக்குள் தமிழ் மாந்தும் இனமே! - உந்தன்
திறமையை உலகறிய வேண்டும்!'

என்று பாட்டுக்குரல் கொடுத்துப் பண்பாடும் இந்த நாட்டு நலக்கவிஞர் இந்த மண்ணையே பாழ்படுத்திவரும் சாதிக் கொடுமைகளை, சாத்திரக் கொடுமைகளைப் போர்க் குணவரிகளால் எதிர்த்து முழங்குகிறார்.

கருவறைக்குள் நுழைவதிலே சாதி உண்டு
கடவுளவர் சன்னதியில் சாதி உண்டு
திருமணத்து மேடையிலும் சாதி உண்டு
தெருவோர மன்றத்தில் சாதி உண்டு
திருவிழாவின் கூட்டமதில் சாதி உண்டு
திண்ணைக் கல்வி கூடத்திலும் சாதி உண்டு
ஒரு தேர்தல் வந்தாலே சாதி உண்டு
ஒரு சாதிக் குள்ளே பல சாதி உண்டு!

என்ற வரிகள் சாதி வெறியர்களை சுட்டுப் பொசுக்கும் எரிதழலாக முகம் காட்டுகின்றன.

‘கோவணம் கட்டாதான் ஊரெனத் தெரிந்தும்
கோவணம் கட்டிவந்தேன்!
கொள்கையைக் காசுக்கு விற்றிடும் ஊரிலே
கொள்கையைப் பேச வந்தேன்!’

என்று தன்னைச் சூழ்ந்த சமூகத்தைப் பார்த்து நையாண்டி வரிகளால் நயமாகப் பாடும் கவிஞர் முத்தெழிலன். அறிவார்ந்த சமூகத்தின் மலர்ச்சிக்காக ஏங்கும் ஓர் ஆண்மைக் கவிஞர்.

இவர் ஏற்றத்தாழ்வுகளில்லாத நாடுகாணத் துடிக்கும் ஓர் எழுச்சிப்புலவர்; பழமையில் மூழ்கிப் பாழ்பட்டுக் கிடக்கும் தமிழ் மக்களை, இந்திய மக்களை மீட்கத்துடிக்கும் புத்துணர்ச்சி மிக்க புதுமைப் படைப்பாளர்!

வெற்று உரைகளாலும், வீர உரைகளாலும், போலித்தனங்களாலும், பொய்மைத் தனங்களாலும் பாழ்பட்டுக் கிடக்கும் தமிழ்ச் சமூகத்தின் நல்வாழ்வே தன்வாழ்வாக எண்ணி வாழும் இவரின் ஏக்கங்கள் அனைத்தும் இம்மண்ணைத் தாங்கி தூக்கவரும் வரிகள் என்பதே உண்மை. இத்தொகுப்பின் ஒவ்வொரு படைப்பிலும், படைப்பின் ஒவ்வொரு வரியிலும், வரியின் ஒவ்வொரு சீரிலும் இவரின் உண்மைக் கவிதை உள்ளத்தை, சமுதாய உணர்வுகளை, பொது நலம் சார்ந்த ஏக்கங்களைக் காண முடிகிறது. நாட்டின் போற்றுதலுக்குரிய கவிஞராக ஒளிமுகங்காட்டும் முத்தெழிலன் படைப்பாற்றல் வெல்க! அவர் காண விரும்பும் புதுமைச் சமூகம் மலர்க! என வாழ்த்தி வரவேற்பது என் போன்றோரின் கடமை.

புதுமைக் கவிஞர் பாரதி, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் படைவரிசைக் கவிஞர்களின் போற்றுதலுக்குரிய தளபதியாக வெற்றிநடைபோடும் கவிஞர். முத்தெழிலன் கவிதைகளை நாளைய உலகம், குறிப்பாக நம் தமிழுலகம் தன் இதயத்தில் ஏந்தி இனிய வரலாறு படைக்கும் என்ற என் நம்பிக்கை மெய்யாகும் என்றும் உறுதியாக நம்பி மீண்டும் கவிஞரின் கவிதை உள்ளம் வெல்க என வாழ்த்துகின்றேன்.



அன்புடன்

பொன்னடி 9/11/95

பொன்னடி

# என்னுரை

தமிழ்ச் சமுதாய விழிப்புணர்விற்குச் சிறிதேனும் பயன்பட மாட்டோமா? என்ற ஏக்கத்தின் அடிப்படைகளில் அவ்வப்போது எழுந்த என் எண்ணக் கனவுகளின் வண்ணக் கவிதைகளின் தொகுப்பு இது.

இச்சமுதாயம் ஒற்றுமை, பகுத்தறிவு, செல்வச் செழிப்பு, மொழியுணர்வு ஆகியவற்றில் சிறந்தோங்கி வாழவேண்டும் என்பதே என் விழைவு.

இக்கவிதை நூலை வெளிக்கொணர ஊக்குவித்த என் அன்பு நண்பர்கள் மானமிகு வை.மு.கும்பலிங்கன் (குடந்தை) திரு. வி.பி.சபரி (ஆசிரியர் தொண்டன்) திரு. எஸ்.டி.பாஸ்கரன் அவர்கட்கும் என் வளர்ச்சியில் அக்கறைக் கொண்டு விருதுகளை வழங்கி சிறப்பித்த 'ஒருங்கிணைந்த எழுத்தாளர் சங்க'த்தின் நிறுவனத் தலைவர் செவாலியர் டாக்டர் கே.தியாகராசன் அவர்கட்கும் இந்நூல் வெளியீட்டிற்கு அரும் முயற்சி மேற்கொண்ட திரு. எஸ்.செபாஸ்டியன் (மலேசியா) அவர்கட்கும் என் நன்றி!

எத்தனையோ பணிகளுக்கிடையே இந்நூலிற்கு அணிந்துரைகள் வழங்கி சிறப்பித்தத் தமிழ்ப் பெருங்குடித் தலைவர்களாகிய தமிழினத் தலைவர் டாக்டர் கலைஞர் அவர்கட்கும் மக்கள் தலைவர் திருமிகு ஜி.கே.மூப்பனார் அவர்கட்கும்.

புதுவை மாநில முதல்வர் மாண்புமிகு வைத்திலிங்கம் அவர்கட்கும் பாவேந்தரின் வழித்தோன்றலும் மூத்த கவிஞருமான திருமிகு பொன்னடியான் அவர்கட்கும் என் நெஞ்சார்ந்த நன்றி!



இந்நூலின் முகப்போவியமும் உள்ளே பாடலுக்கேற்ப ஓவியமும் வரைந்து உதவிய ஓவியக்கலைஞர் திரு. மேக்ஸ் அவர்கட்கும் அவருடன் ஒத்துழைப்பு நல்கிய ஆர்.ரவிராஜா அவர்கட்கும் என் நன்றி!

இவன்



## மகிழ்வைத் தரும் தமிழே!

இளமைத்தவழ் புலமைப்புகல்
இனிமைநிறை கலையும்
வளமைப்பெரு வழியில் வளர்
மகிழ்வைத்தரு தமிழே!

மழலைத்தவழ் அழகின்மொழி
மதுவில்நிறை சுவையில்
குழறித்தர ஒளிரும் எழில்
குலவிமகிழ் தமிழே!

நிலவில்நனை குளிரின்பனி
நினைவில்தரு இதமே!
உலகில்தனிப் புகழில்வளர்
உயிரில் நிறை தமிழே!



# வா, தமிழே வா!

தண்ணிலவின் குளிரெடுத்துத்
தரணியெங்கும் வென்றுலவி
தென்றலெனும் தேரேறி
வா தமிழே வா!

மண்ணிலுறும் மொழிகளிலே
முச்சங்க மடிதவழ்ந்த
மூத்தமொழி நீயெனவே
வா தமிழே வா!

செத்தாரைப் போலிருக்கும்
செந்தமிழர் வாழ்வினிலே
இனமான உயிரூட்ட
வா தமிழே வா!

ஏற்றமிகு தமிழரின்று
எடுப்பார் கைப்பிள்ளையெனும்
இழிநிலையை ஒழித்திடவே
வா தமிழே வா!

எதுகை, சீர் மோனைதரும்
எழிலார்ந்த சந்தங்கள்
யாப்புடனே கவிபாட
வா தமிழே வா!



பகுத்தறியும் திறனில்லாப்
பழமையதைக் கொளுத்திடவே
புரட்சியெனும் கனலேந்தி
வா தமிழே வா!

# தாய்மையில் சிறக்கும் தமிழே!

வாழ்கின்ற போதிலே
வாயாரப் புகழ்பாடி
வகைதேடிக் கொண்ட பின்னும்

வருகின்ற உறவுகள்
வரிசையிட்டுச் சொல்லி
உரிமைகள் கண்ட சொந்தம்

தாழ்கின்ற நேரத்தில்
தூரத்தில் விலகியே
தூற்றியே மகிழும் அங்கே! - அட

தாழ்விலும் வாழ்விலும்
தாயாக உறவாடி
துணையாக நிற்கும் தமிழே!

மேனியில் எழில்கூட்டி
மோகத்தில் எனைவீழ்த்தி
மார்பினில் சாய்ந்த மங்கை!

மானியல் போல்துள்ளி
மகிழ்ச்சியில் கூத்தாடி
மடியினில் படர்ந்த நங்கை!

நானினி நிலவில்லா
வானம்போல் ஆனதும்
நெருக்கம் அழிந்தபின்னும்

நாவிலும் நினைவிலும்
நற்கவி பாட்டிலும்
நீங்காது நின்ற தமிழே!

நெஞ்சத்தில் கொஞ்சமும்
நேர்மைத் திறமின்றி
நஞ்சினை உள்ளே வைத்து

நெக்கு நெக்குருகி
உன்னை வளர்ப்பதாய்
நாட்டுக்குள் பேசி நின்று

கொஞ்சுந் தமிழினில்
கோணல் மொழிகளைக்
கள்ளத் தனமாய்க் கலந்து

கொள்கைக்குக் குழிதோண்டி
கோடிகள் சேர்த்திடும்
கூழைக் கவிஞர் கட்கும்

பாயில் படுத்ததைப்
பெண்ணோடு சேர்கதை
பச்சையாய் சொல்லிச் சொல்லி

பாராளுந் தமிழினில்
பிழையுற எழுதியே
பிழைப்பாக்கிக் கொண்ட பேர்க்கும்

தீயாக எரிந்து நீ
தீராத பகையாகத்
தீமையை வீழ்த்தும் தமிழே!

தூய்மையில் நீராடி
வாய்மையில் சீராடி
தாய்மையில் சிறக்கும் தமிழே!





# இனம் வாழவேண்டும்!

இனமானம் இனமானம் வேண்டும்! - உன்
இதயத்தில் தமிழ்வாழ வேண்டும்!
உணவோடு உயிர்வாழ்வும் வாழ்வா? - புது
உரமோடு மொழிப்பற்றும் வேண்டும்!

இருள்வானம் போல்வறுமை வரினும் - உந்தன்
இதயத்தில் தன்மானம் வேண்டும்!
பொருள்தேடும் செல்வரையே பாடி - பதவி
புகழ்தேடா நிலையென்றும் வேண்டும்!

முடமான சமுதாயம் தனையே! - உன்
மொழிப்பற்றால் முன்னேற்ற வேண்டும்!
திடமான உள்ளத்தின் துணிவால் - உன்
திறனாலே இனம்வாழ வேண்டும்!

செயல்யாவும் பகுத்தறிவால் தழைக்க - இருள்
சதிராடும் அறியாமை மறையும்!
அயல்மொழியில் நம்நாட்டு வளமும் - பிறர்
அறிந்திடவே பணியாற்றல் வேண்டும்!

நம்நாடு நமதென்ற எண்ணம்! - உன்னை
நிமிர்ந்தெழவே செய்வதிங்கு திண்ணம்!
சும்மாநீ கதைபேசல் வேண்டாம்! - தம்பி
சூளுரைத்துச் செயலாற்றல் வேண்டும்!

உறவுக்குக் கைநீட்ட வேண்டும் - நம்மின்
உரிமைக்குக் குரல்கொடுக்க வேண்டும்!
நறவுக்குள் தமிழ்மாந்தும் இனமே! - உந்தன்
திறமையை உலகறிய வேண்டும்!



# துணையாகி வா தமிழே!

கோவணம் கட்டாதான் ஊரெனத் தெரிந்தும்
கோவணம் கட்டி வந்தேன்!
கொள்கையைக் காசுக்கு விற்றிடும் ஊரிலே
கொள்கையைப் பேச வந்தேன்!

ஆவாரம் புற்றினில் அடங்கிய பாம்புக்கு
அமுதினை ஊட்ட வந்தேன்!
ஒன்றும் அறியாத கருத்துக் குருடர்முன்
ஓவியம் காட்டி நின்றேன்!

கோவிலில் காணிக்கை பாவத்தில் பாதியாய்
கொட்டியே முக்தி தேடி
கடவுளை ஏமாற்றும் கயவரின் முன்னாலே
கடமையைப் பேசி நின்றேன்!

தாவிடும் குரங்கைக்கை மாலையாய் சிக்கியே
தடுமாறும் எனைக்காக்கத்
தருவாகி உருவாகி தளிர்கொஞ்சும் குளிராகி
துணையாகி வாதமிழே!

கற்றுத் தெளிந்தவன் வேலை கிடைக்காமல்
ஊரினைச் சுற்றுகின்றான்!
காலம் கனியட்டும் என்று நம்பியே
காலம் கடத்தி விட்டான்

முற்றுந் துறந்தவன் மாளிகை வாசிபோல்
உல்லாசம் காணுகிறான்!
முக்காலம் உணர்ந்தவன் என்று முழங்கியே
வாழ்வினில் ஏற்றம் பெற்றான்!

வெற்றுரை பேசியே வேடிக்கை செய்திடும்
வீணர்களை நம்பி
வேத முழக்கென்றும் வேதனின் வாக்கென்றும்
மண்டியிட்டுத் தொழுதேன்

சற்றுந் தெளிவின்றி அறியாமைச் சகதிக்குள்
தடுமாறும் எனைக்காக்கத்
தருவாகி உருவாகி தளிர்கொஞ்சும் குளிராகி த்
துணையாகி வா தமிழே!

நடமாடும் மனிதரின் நெஞ்சுக்குள் நஞ்சுண்டு
நானதை அறியவில்லை
நிழலோடு போராட்டம் நடத்தியே வாழ்கிறேன்
எதிரியைத் தெரியவில்லை

நடை பிணம் போலவே மனிதரும் உண்டென்றார்
நானதை நம்பவில்லை
நிறமாறும் குணங்களின் நடுவினில் சிக்கினேன்
நீந்தத் தெரியவில்லை

படமாடும் பாம்புக்குப் பால்வார்த்து வளர்த்தாலும்
பாய்ந்தங்கு சீறுமென்று
பலகாலம் படித்தாலும் பலபேர்கள் சொல்லியும்
பதியாமல் போனதினால்

தடம்மாறும் உலகினைத் துணையாக நம்பியே
தடுமாறும் எனைக் காக்கத்
தருவாகி உருவாகி தளிர்கொஞ்சும் குளிராகி
துணையாகி வா தமிழே!



# வழிகாட்ட வா, நிலவே!

மண்ணோடு மண்ணாகி மடிகின்ற உடலென்று
முடிவையே கூறியவனும்
மழைநீரின் குமிழ்போல மறைகின்ற வாழ்வென்று
மேதைபோல் சொல்லி யவனும்

கண்ணாடிக் கன்னியுடல் தருகின்ற சுகத்திற்குக்
கடைநாயாய் அலைவ திலையோ?
கனிரசமும் கறிச்சுவையும் கணக்காக தின்றுதினம்
கட்டுடலை வளர்க்க விலையோ?

முன்னுக்குப் பின்னாக முரணான கூற்றதனை
வேடிக்கை என்று தள்ளி
மனத்திரையில் இருளகல பகுத்தறிவு ஒளிதிழக
வழிகாட்டி வா நிலவே!

விண்ணேறிப் பறக்கின்ற வானூர்தி தனிலேறும்
வாய்ப்பொன்று அமையாதவன்!
வானத்தில் சுழல்கின்ற கோள்களுக்குக் குறிசொல்லி
வாழ்கின்ற விந்தை என்ன?

மென்மலராள் தன்மனைவி மழலைச்சொல் பிள்ளைகளின்
மனமறிய மாட்டாதவன்
விண்ணுக்கு அப்பாலே வாழ்கின்ற கூட்டத்தின்
வரலாற்றை அறிந்த தென்ன?

முன்னாடும் பூசணியை முழுதாக சோற்றினிலே
மறைக்கின்ற பொய்மை எள்ளி
மறைமேக இருளகல பகுத்தறிவு ஒளிதிழக
வழிகாட்டி வா நிலவே!

# வீறுகொள் தமிழா!

அன்னைத் தமிழுக்கு எத்தனை அவலங்கள்
எழுந்திடடா தமிழா! - அட
முன்னை மூத்தமொழி உன்னை வளர்த்தமொழி
முத்தரையாண்ட மொழியே! - ஒளி
கண்ணை இழந்துநாம் பாராள நினைத்தால்
கைகொட்டிச் சிரியாரோ! - இந்த
மண்ணை இழந்துநாம் அடிமையாய் வாழ்ந்தால்
மரக்கட்டை போலாமோ?

உன்றன் தொடைதனில் கயிறு திரிக்கிறார்
கொஞ்சமும் உணர்விலையோ! - அட
இன்னு மேன்உறக்கம் இதற்குமா பொறுமை
எழுந்திடடா தமிழா! - நமை
என்ன நினைத்திங்கு இத்தனை மொழிகளும்
ஆதிக்கம் செலுத்த வருமோ? - தமிழ்
அன்னை இவள்பின்னே நாங்கள் இருப்பதை
மறந்து தொலைந்ததுவோ?

எத்தனைப் பிரிவுகள் எத்தனைச் சாதிகள்
எங்கேதமிழா ஒற்றுமை - அட
இத்தனைச் சாதிகள் பிரித்துவைத்தவனின்
தலைதனை இங்கே கொணர்வாய்!
சித்தத் தெளிவுகள் சிறிதும் இல்லாமல்
சாதிசகதியில் புரண்டாய்! - அட
நித்தமும் சண்டையில் நிதானம் இழந்தாய்
இனமானம் என்பதை மறந்தாய்!



தமிழர் நாட்டிலே தமிழின் பகைவரைத்
தலைமை ஏற்க விடலாமோ ?
தமிழர் போலநல் வேடம் பூண்டவர்
தரணி ஆளவிடலாமோ!
அமுதம் என்றாலும் அதனைப் பெற்றிட்டே
ஆட்சியைத் தரலாமோ!
குமுறும் நெஞ்சங்கள் கொள்கை முழங்கிட
கூடிடுவாய் தமிழா!



# ஒற்றுமை எங்கே?

ஒருமொழியில் உலகாண்ட தமிழினமே எங்கே?
உருக்குலைந்து உன்னிலையே வீழ்ச்சியுற்ற தென்ன?
பருவயிரத் தோள்களிலே பிறன்பாதம் தாங்கிப்
பெருவீரந் தனைமறந்து குற்றேவல் செய்வாய்
உருப்படியாய் இல்லாமல் அடிமையாய் வாழ்ந்து
உணர்வற்றுப் போனதினால் உன்மொழியாம் இன்ப
உயர்தமிழைப் பின்தள்ளி அடுத்தமொழி பேசல்
உயர்வென்றே எண்ணிமிக இறுமாந்து நின்றாய்!

இலக்கியத்தில் காண்கின்ற பெயர்களெல்லாம் எங்கே?
இனியதமிழ் இருக்கையிலே பிறமொழியில் பேர்கள்
நலமுறவே விரும்பியிட்டு தமிழரென்றால் நன்றோ?
நூறுபல ஆண்டுகளாய் அடிமையாய் வாழ்ந்து
பலமொழிகள் அழுத்தத்தில் உன்மொழியை மறந்து
பிறமொழியே உயர்ந்ததென தன்னிலையில் தாழ்ந்து
குலவுதமிழ் மொழிதனையே குறைத்துமதிப் பிட்டாய்!
குனிந்தபடி வாழ்கின்ற குள்ளமனங் கொண்டாய்!

சங்கங்கள் வைத்தன்று முத்தமிழைக் காத்த
சிங்கங்கள் எங்கிங்கே மறைந்தோடிப் போச்சோ?
சங்கங்கள் வைத்தின்று சாதிகளைக் காக்கும்
சதிகாரர் கூட்டமதின் கொட்டமதைக் கண்டே
எங்கெங்கோ தேடுகின்றேன் ஒற்றுமையைக் காணோம்!
இனிவருமா என்பதிலும் சந்தேகந் தானோ?
கங்குலென அறியாமை அறிவுமதி மூட
கற்றறிந்தும் பலனின்றி கரைந்துருகிப் போச்சோ?



# நிலவுக்கு எச்சரிக்கை!

கொஞ்சும் நிலவே கொஞ்சம் நில்லடி
  கொடும்பகை நீயோ, காதலைக் கொட்டுகின்றாய்!
நெஞ்சம் நிறைந்தே என்னவள் இருக்க
  நெருக்கம் இல்லா நீயேன் மயக்க வந்தாய்?

வஞ்சியர் உலகின் வழக்கம் இதுவென
  வேடிக் கைசெய்தே ஒருநாள் மறைகின்றாய்!
மஞ்சம் எங்கே? மலர்தான் எங்கே?
  மாபகை காமக் கனலே மறைந்தொழிவாய்?

உனக்கும் எனக்கும் என்னடி உறவுகள்
  உன்முகப் பொலிவினை என்னிடம் காட்டுகின்றாய்
உனதுடல் முழுதும் தண்கடல் நனைந்தும்
  உனக்குள மோகம் கொஞ்சமும் தணியலையோ?

எங்கோ வானில் உலவும் நிலவே!
  எத்தனைப் பேர்களைத் தவித்திட விட்டிருப்பாய்!
மங்கா புகழிலுன் மேன்மை சிறந்திட
  மாபெரும் கவியும் மயங்கிப் பாடியுள்ளார்!

அறிவியல் அறிஞர் உன்னிடம் வருவார்
  அன்றுதான் புரியுமுன் அறியா நிலைமையும்!
தறியில் சிக்கிய நூலென நைந்து
  தணலும் கல்லும் மணலுமாய்த் திகழ்வாயே!



# சாதி உண்டு!

கருவறைக்குள் நுழைவதிலே சாதி உண்டு
    கடவுளவர் சன்னிதியில் சாதி உண்டு
திருமணத்து மேடையிலும் சாதி உண்டு
    தெருவோர மன்றத்தில் சாதி உண்டு
திருவிழாவின் கூட்டமதில் சாதி உண்டு
    திண்ணைக்கல்வி கூடத்திலும் சாதி உண்டு
ஒருதேர்தல் வந்தாலே சாதி உண்டு
    ஒருசாதிக் குள்ளேபல சாதி உண்டு!

கருமனத்தோர் கடவுளிலும் சாதி உண்டு
    குடியேறும் சுடுகாட்டில் சாதி உண்டு
வருமானம் பெருக்குவதில் சாதி இல்லை
    வெளிநாடு சென்றாலும் சாதி இல்லை
நிறைமனத்துக் காதலிலே சாதி இல்லை
    நலங்காக்கும் மருந்தகத்தில் சாதி இல்லை
கருவாட்டை விற்றகாசில் சாதி இல்லை
கட்டிலறை அணைப்பினிலே சாதி இல்லை!

தாமென்ற சுயநலத்தில் சாதி உண்டு
    திறமிக்கோர் அறிவியலில் சாதி இல்லை!
தூமென்ற மூடரிடம் சாதி உண்டு
    'ஜா' எழுத்து வருமுன்னே சாதி இல்லை
இனமானம் இல்லார்க்குச் சாதி உண்டு
    இனங்காக்கும் தமிழர்க்கோ சாதி இல்லை!
பிணமான தமிழரிடம் சாதி உண்டு!
    பழந்தமிழர்க் கூட்டமதில் சாதி இல்லை!



# தமிழுக்கோர் தாலாட்டு!

இனங்காக்க வந்தவனே! - என் தமிழே
இதழூறும் மதுரசமே!
தினமுந்தன் நலம்வாழ - என்னுயிரே
தாலாட்டுப் பாடிடுவேன்!

முன்னை மூத்தமொழி - என்தமிழே
முழுதுலகம் ஆண்டமொழி
கண்ணே கனிரசமே! - என்தமிழே
கண்களிலே கவிபேசு!

நீதி நேர்மைகாக்க - என்தமிழே
நெருப்பாற்றைத் தாண்டிவந்தாய்!
போதி மரபுத்தனைப் போல் - என் தமிழே
நெஞ்சுக்கு நீதி கண்டாய்!

சாதிப் பேர் சொல்லச் சொல்லி - என் தமிழே
சதிக்காரர் பிரித்துவைத்தார்
ஆதியிலே உள்ளதுபோல் - என்தமிழே
அரவணைக்க வந்தவனே!

சங்கம் மூன்றும் வந்து - என்தமிழே
சீதள நிலவாச்சோ!
அங்கம் ஏறிவந்து - என் தமிழே
அரங்கேறி அழகாச்சோ!

ஆண்டயினம் மாண்டதின்று - என்தமிழே
அடிமைப் புத்தி கொண்டு
மீண்டும் எழுச்சியுற - என் தமிழே
வல்லமையைத் தாராயோ!



ஆதிக்க மொழியாவும் - என் தமிழே!
அடுக்கடுக்காய்ப் படையெடுத்தும்
பாதிக்கப் படாமலே - என் தமிழே!
புதுமையில் பூத்தவன் நீ!

சோழர்குலம் காக்க - என் தமிழே
முத்துவேல் வில்லெடுத்து
வேழம் பொருதுவந்து - என்தமிழே
வீரம் காட்டுகின்றாய்.

'வாழி' எனும் வாழ்த்தில் - என்தமிழே
வையகமே செழிக்காதோ ?
யாழின் இசை கேட்டு - கண்ணுறங்காய்
அஞ்சுகத்தின் கையமுதே!

குறளே ஓவியமாய் - என்தமிழே
கனிந்தொழுகித் தேனாச்சோ?
திறமையெல்லாம் ஒன்றாகி - என் தமிழே
தலைவனென வந்தாயோ!

தியாகத் தழும்புகளே! - என்தமிழே
திருவுடலாய் ஆனதுவோ ?
நியாயம் தெரியாத - நாட்டில்
நிறைகுடமாய் வந்தவனே!

அகத்தில் அழுக்கேறி - என்தமிழே
அறியாமைக் குப்பைமூட
பகுத்தறிவுச் சுடரேந்தி - என்தமிழே
புறப்பட்டாய் வீதிவலம்!

காலம் கனிகிறது - என்தமிழே
கருணையில் காத்திருப்பாய்!
காலம் கனிந்த பின்னே - என்தமிழே
குவலயமே உன் கைகளிலே!



# தமிழ் இளைஞனே வருக!

''வாழ்கதமிழ் வாழ்க'' வென்று
வான மெங்கும் முழங்கியே!
வீழ்ச்சியுற்ற இளைஞனே
வீறு கொண்டு வருகவே!

அழிவகற்றி அறிவுகொண்டு
ஆக்கந் தன்னைச் சேர்க்கவே
விழியைப் போலும் மொழியைக் காக்க
விரைந்து நீயும் வருகவே!

உலகமெங்கும் உலவிவந்து
உயர்ந்து நிற்கும் உன்மொழி
நிலவிலேறி கொடிபொறித்து
நலங்கொ ழித்து வாழவே!
தமிழெடுத்து திசைகள்தோறும்
தமிழ்மு ழக்கம் செய்திடு!
தமிழரென்றும் ஒன்றுஎன்று
தரணி வியக்க வருகவே!



வஞ்சகரின் வலையறுக்க
வருக நீயும் வருகவே!
கொஞ்சுதமிழ் பகையழிக்க
நெஞ்சு யர்த்தி வருகவே!

கெஞ்சுவதும் அஞ்சுவதும்
கனவிலுமிங் கில்லையே!
பஞ்சம்பிணி பசியுமோட
புதுமை செய்து வருகவே!

சாதியென்னும் சதிகளாலே
சிதறி போடிப் போவதோ!
ஆதிநிலைத் தமிழர்போல
அன்பில் ஒன்றித் திகழ்ந்திட

பகுத்தறிவுப் பாதைதன்னில்
படைநடத்தி வருகவே!
திகைத்துலகு வியப்பிலாழ
திறமை ஏந்தி வருகவே!

நேற்றுவரை ஆண்டஇனம்
நாதி யற்றுக் கிடப்பதேன்?
தூற்றுவோர்கள் தூற்றட்டும்
துடித்தெ ழுந்து வருகவே!





# உலகம் நம்பிடும் நாள் வரையில்....

இறைவா! இறைவா! எங்கேநீ? - உன்
இருப்பிடம் எனக்குச் சொல்லிவிடு!
மறைவாய் நீயே தருவதெல்லாம் - நான்
மறந்தே, மறந்தே போகின்றேன்!

முறையாய் என்முன் வந்துவிடு! - உன்
முழுஉரு என்னிடம் காட்டிவிடு!
குறையாய் உன்னிடம் சொல்லிடவே - ஒரு
கோடி மனுக்கள் வைத்துள்ளேன்!

வருந்திப் பாவம் சுமப்போரே! - இங்கு
வாரும் எம்மிடம் என்றீரே!
வருந்தி ஆசைகள் சுமக்கின்றேன் - அதை
வகையாய் தந்திட வருவீரே?

உழைப்பில் எனக்கோ மனமில்லை - அட
உழைத்த களைப்பும் எனக்கில்லை!
உழைக்காச் செல்வம் வரவேண்டும்! - நான்
உலகில் சிறந்திடத் தரவேண்டும்!
இறைவா! இறைவா! வரமாட்டாய் - நல்
இசைவாய் பொருள்தனைத் தரமாட்டாய்!
அறியா பொருளெனக் கதைக்கூறி - உன்
அசைவில் பெரும்பொருள் ஈட்டிடுவேன்!

உன்னில் கதைகள் பலசொல்லி - இங்கு
உன்னை வைத்தே பிழைத்திடுவேன்
உண்மை பக்தன் நானெனவே - இந்த
உலகம் நம்பிடும் நாள்வரையில்!



# தேர்தல் கால பாப்பாப் பாட்டு

ஓடி விளையாடும் பாப்பா - உனக்கு
உண்மையைச் சொல்லிடுவேன் பாப்பா!
நாடு நகரெங்கும் பாப்பா - தேர்தல்
நாளும் நெருங்குதடி பாப்பா!

தேர்தலில் வெற்றிபெற வேண்டும் - நம்
தேவைகளும் நிறைவேற வேண்டும்
ஊர்திகள் பலப்பல பாப்பா - நம்
உரிமைகள் ஆகனும் பாப்பா!

மாடிகள் கட்டவேண்டும் பாப்பா - அது
மாளிகை போலிருக்க வேண்டும்!
வேடிக்கை நம்வாழ்வில் என்றும் - சூழ்ந்து
விளையாடி மகிழனும் பாப்பா!

ஜாதிகள் வேண்டுமடி பாப்பா! - அது
தேர்தலுக்குத் தேவையடி பாப்பா!
நீதிநெறிகளெல்லாம் பாப்பா! - நம்
நாட்டினில் கதைகளடி பாப்பா!

வாக்குறுதி என்பதெல்லாம் பாப்பா - நம்
வாய்மையின் விளையாட்டு பாப்பா!
தாக்குமடி யாட்கள் தினமும் - நமக்குத்
துணையாக வரவேண்டும் பாப்பா!

பாலுக்குக் காவலடி பாப்பா - நாம்
பூனைக்கும் தோழனடி பாப்பா!
மேலுக்கு ஏழைக்காய் பேசியே - காசில்
மேலோர்க்குத் தெண்டனிடு பாப்பா!



# தமிழுக்குள் எத்தனை இன்பம்!

தமிழுக்குள் எத்தனை இன்பமே! - அந்தத்
தமிழெங்கள் வாழ்வுத்தேன் என்போமே!
அமிழ்தத்தில் விளையுந்தேன் சிந்துமே! - அது
தமிழுக்கு மட்டுந்தான் சொந்தமே!

சிலம்பணி காவிய மங்கையே! - இன்பஞ்
செழித்த மணிஅணி கொங்கையே!
துலங்கும் மேகலைத் திங்களே! அதில்
துவளும் ஒளிர்வளைச் செங்கையே!
தண்குளிர் மலரிதழ்க் கன்னமே! - அது
தேன்மது தாங்கிடும் கிண்ணமே!
விண்ணொளி சூழ்ந்திடும் மின்னலே! - எங்கள்
முத்தமிழ்த் தித்திக்கும் கன்னலே!

மலருக்குள் கண்டிடும் மஞ்சமும் - அந்த
மங்கையின் நெஞ்சத்துத் தஞ்சமும்
இளமைக்குள் துஞ்சிடும் கொஞ்சலும் - எங்கள்
தமிழ்தரும் சுகத்தினை விஞ்சுமோ ?

தாய்மையில் தாலாட்டும் அன்னையே! - மெல்ல
தாவிவரும் இளங் கன்னியே!
வாய்மையில் என்றென்றும் உண்மையே! - குறள்
வகுத்திட வைத்த கருணையே!



# தமிழர் சமுதாயத்தைக் கரையேற்றுவோம்!

அறிவான நெஞ்சங்கள்
அவையேறி வீற்றிருக்க
அறியாத பிள்ளைநானும்

அரும்பாத மலராலே
அமைகின்ற மாலையென
அருங்கவிதைப் பாடவேணும்!

தெரியாமல் செய்பிழையைத்
தண்தமிழால் மன்னிப்பீர்!
தேரேறி வீற்ற கவியே!

தெள்ளுதமிழ்ப் பாட்டெடுத்துப்
துள்ளிவந்து பாடிடுவேன்
துணிவாக நூறுகவியே!

உறியினிலே தயிரிருக்க
உருகிவரும் வெண்ணெய்க்கு
ஊரெங்கும் தேடும் மணமே!

உடனடியாய்த் தமிழர்தம்
சமுதாயம் கரையேற்ற
உருப்படியாய் பாடுதினமே!

பணமான வருமானம்
பலகோடி பெறுதற்குப்
பாதையதை அமைக்கும் நேரம்!

பதவிசுகம் பலன்காண
பைந்தமிழைப் பலியாக்கி
பேருபுகழ் தேடும் நேரம்!

இனமானம் இல்லாமல்
இருக்கின்ற பிணங்களுக்கு
இதுஒரு கால நேரம்!



இருளுக்குள் மறைந்திருந்து
இனிவிடியாது என்றெண்ணும்
இளிச்சவா யர்க்கிது நேரம்!

மனமதிலே மகிழவரும்
மதியுலவும் புலமையொடு
மொழிகாக்க வந்த மலரே!

முறையற்ற சமுதாயம்
முனைவோடு கரையேற்ற
முனைப்போடு வருக நிலவே!

தமிழர்நெறி பொய்த்ததெனச்
சாதிநெறி தழைக்குமெனச்
சொன்னவனைச் சாய்க்கும் நேரம்!

தமிழென்றும் ஆட்சிக்குத்
தகுதியிலை எனக்கூறும்
தறுதலையை உதைக்கும் நேரம்!

திமிராடும் தனிவர்க்கம்
செய்கின்ற கொடுமைகளைத்
தகர்த்துவிட தகுந்த நேரம்!

திரைகடல்கள் பிரித்தாலும்
தண்தமிழர் ஒன்றெனவே
தரணிக்கு முழங்கு நேரம்!

மகிழவரும் மனமதிலே
மதியுலவும் புலமையொடு
மொழிகாக்க வந்த மலரே!

முறையற்ற சமுதாயம்
முனைவோடு கரையேற்ற
முனைப்போடு வருக நிலவே!

நேற்றுவரை நண்பனென
நம்பியவன் எதிரியாகி
நமையெதிர்க்கும் கால நேரம்!



நாளுமிவன் எதிரியென
நினைத்திருந்த நிலைமாறி
நண்பனென ஆகும் நேரம்!

காற்றடிக்கும் வேளையிலே
காலநேரம் பார்த்திருந்து
கணைபாய அலையும் நேரம்!

கவிகோடி உருவாக்கி
கவிஞர்தம் அவைமுன்னே
கனலாகி வருக தமிழே!

சுற்றுமிகு சுழலுலகில்
சமதாயம் கரைசேர
சுகமான கவி ஆகியே

தளிரிளமை குளிரினிமை
தழுவிவர தமிழருவித்
துள்ளியெழப் பாடுநிலவே!

ஒரு கோடி தடைகளையும்
உடைத்தெறிந்து எதிர்நீச்சல்
உவகையுடன் போட்டபோதும்

ஒருபோதும் சளைக்காமல்
ஓடியோடி உழைக்கின்ற
உன்திறமை காட்டும் போதும்

கருமேக மழைநடுவே
கனத்தயிடி மின்னலெனக்
கவலைகள் சூழ்ந்த போதும்

கனித்தமிழர் வாழ்வினிக்கக்
களிப்பினிலே மூழ்கிடவே
கவியாகி வருக நிலவே!

தருநிழலின் குளிரினிமை
தழுவிவர தமிழருவி
சுழலினிலே நீந்தும் மனமே!



திருவுலவும் தமிழுலகு
திறமைமிகு உன் செயலில்
தனைமறந்து வாழ்த்தும் தினமே!

வலியோர்கள் எளியோரை
வாட்டிடுவார் திமிரோடு
வன்முறையைக் கையில் கொண்டு

வலியோரும் 'எலி'யார் முன்
வலுவிழந்து பயந்தொடுங்கி
ஓடிடுமோர் நிலைமை இன்று!

கலிகாலம் என்று கூறி
குஷ்புவுக்குக் கோயில் கட்டும்
குறைமதியர் வாழும் நாட்டில்

எலியாளும் என்றுநம்பி
'எலிக்கோயில்' வழிபாட்டில்
இறையானார் பலநூறு வீட்டில்

அழிவுதரு அறியாமை
அதிர்ந்தழிந்து பொடிபடவே
அறிவுமிழக் கவிதொடுப்பாய் கனலே!

அருளொளிரும் நிலைகள் வர
அமைதியதில் தழுவிவர
அழகுமிழும் கவியெழுது தினமே!

ஒருமொழியால் உலகாண்ட
ஒருகோடி கதைபேசி
உதவாமல் போன வேளை!

ஒற்றுமைக்கு உலைவைத்து
ஓயாமல் பிரிவினைக்குள்
உறங்கியே கிடக்கும் வேளை!

அறியாமை சகதிக்குள்
அகப்பட்ட தமிழினமே
அடியோடு அழியும் வேளை!



அடங்காத சாதிவெறி
அதனோடு மீதிவெறி
அறிவிழக்கச் செய்யும் வேளை!

குறைமதிகள் குலைந்துபட
குலவுதமிழ் தலைநிமிர
குமுறிவரும் கொள்கை இருப்பே!

குமுகாயம் கரைசேர
கனவுலகப் பொய்மைகளைக்
கொளுத்திடவே வருக நெருப்பே!

பெற்றவளைக் கொல்லுதற்குப்
பட்டயத்தைத் தூக்கிவரும்
பிள்ளைகளும் இங்கே உண்டு!

பெற்றபிள்ளை பசிக்காகப்
பரிதவிக்கும் நிலைகண்டு
விற்றுவிடும் அன்னை உண்டு!

---

✱ பட்டயம் = வாள்

கற்றுத்தரும் ஆசானும்
கடமைகளை மறந்திருந்து
கோணல்வழி போவதும் உண்டு!

கற்புநெறி சொன்னவர்கள்
காலநிலை மாறிவர
களங்கத்தில் வீழ்ந்த துண்டு!

கொற்றவரைக் குலவிமகிழ்
கொஞ்சுதமிழ் தவழவரும்
குளிரிளமை கொண்ட புனலே!

கொடியமதி அடிமைநிலை
கொடுமைகளும் பொடிபடவே
கவியாகி வருக கனலே!



# பூனை

மெல்லியநல் பட்டினத்துப் பெண்கள் போலும்
மஞ்சமதில் பஞ்சுபொதி மிருது வாக
வல்லியிடை வழுவழுப்பாய் வழுக்கும் மேனி
வகையாகக் கொண்டஉன்பேர் 'பூனை' என்பார்!
மல்லிகைபோல் மலர்களிலே இனத்தைப் பெருக்க
மகரந்தத் தூளோடு தேனும் உண்டு!
மெல்லியளே! குட்டிபல ஈனும் உன்னில்
மலர்நெய்யும் இருப்பதாலோ 'பூநெய்' என்றார்!

புலிகளுக்கு நேரெதியாய்ப் பிறந்த போதும்
புலிப்பாய்ச்சல் உன்பாய்ச்சல், உன்னைக் கண்டால்
எலிகளுக்கு உயிர்துடிப்பே அடங்கிப் போகும்
எடுத்தவடி ஒவ்வொன்றும் பதுங்கிப் பாயும்
புலிகளுக்கு நிகராம்உன் போர்முறைக் கண்டே
புவிகாக்கும் தலைவரையே பாது காக்க
வலுவான படையமைத்துச் சுற்றிச் சுற்றி
வரும்படைக்குப் 'பூனைப்படை' என்றே பேராம்!

காரிருளில் கண்களையே கண்டு விட்டால்
கடைந்தெடுத்த வைரத்தின் ஒளியே மின்னும்
கூரியநல் நகங்கள்கூட ரோஜா முள்ளின்
குடும்பத்தை ஒத்திருக்கும்; உறுத்தும் மீசை
பாரினிலே தமிழ்வளர்த்த பாண்டிய மன்னரின்
படைவீரர் கொண்டிருந்த மீசை போலாம்!
தேரிலேறும் கடவுளவர் பக்தனைக் கூட
திருடுவதில் உன்னோடு ஒப்புமைக் காண்பார்!

எத்தனைத்தான் நிறத்தாலே பிரித்தா லுமிங்கு
அத்தனையும் மனிதயினம் ஒன்று என்று
புத்தனைப்போல் சித்தனைப்போல் உலகில் தோன்றி
புரியாத பதர்மனிதர் திருத்து தற்கே
எத்தனையோ நிறக்குட்டிப் போட்டி ருந்தும்
அத்தனையும் தனதெனவே ஏற்கும் தாயே!
வித்தைகளைக் கற்றிருக்கும் மனித ரிடம்நீ
விரும்பியே பழகிடினும் ஏற்பா ரில்லை!
அறியாமை புதைச்சேற்றில் அழுந்தும் இவரை
ஐந்தறிவைப் பெற்றதனால் அறிய மாட்டாய்!
குறிகேட்டு வாழ்வமைக்கும் குறைமதி யார்கள்
குறுக்கேநீ சென்றாலும் சகுனம் என்பார்
உறிதிருடும் பழக்கம்மிக உண்டென் றாலும்
உனைத்திருத்த தடியெடுத்தால் ஓடி ஒளிவாய்!
வெறிபிடித்த வைதீக மனத்தார் மட்டும்
வெளிவேடம் போட்டிருப்பார் திருந்த மாட்டார்!



# கடல்

காண்கின்ற திசையாவும் கடலே! கடலே!
கரையெங்கே தேடுகிறேன் காண வில்லை!
நான்காணும் காட்சியாவும் கனவா! நனவா?
நீள்கின்ற தொடுவானம் மட்டும் கண்டேன்!
வான்தொட்ட கரையெங்கே? தெரியவே இல்லை!
விரைந்துநான் சென்றாலும் முடிவே இல்லை!
மீன்வந்து விளையாடும் கடலில் எங்கும்
முழுதாகம் தீர்க்கின்ற குடிநீர் இல்லை!

உன்வயிற்றில் முத்துண்டு பவளம் உண்டு
உலகறியாச் செல்வங்கள் அனைத்தும் உண்டு!
உண்பதற்கோ கடலுணவு வகையாய் உண்டு!
உருண்டோடி தாலாட்டும் அலைகள் கொஞ்ச
உன்மடியில் துஞ்சுகின்ற அன்னை பூமி
உருப்படியாய் வாழ்வதும் உன்னால் தானே!
விண்பட்டு நிறமாறும் விந்தை களெல்லாம்!
விரிந்திருக்கும் கடல்மீதில் விளையக் கண்டேன்!

கடலே நீ! எச்சரிக்கை எடுத்துக் காட்டு!
குமுறியெழும் எரிமலையும் உன்னுள் அடக்கம்!
தடம்மாறும் புயற்காற்றின் கருவும் நீயே!
திசைமாறி வீசுவதும் உந்தன் செயலே!
உடன்சுழன்று வீசியெழும் அலைகள் முன்னால்
உலகமென்ன, பாவமொரு துரும்பு அன்றோ!
கடலே நீ! வற்றாத ஜீவ நதியே!
குவலயத்தை வாழவைக்கும் களஞ்சியம் நீதான்!

கலமேறி நாடுவென்ற எந்தன் தமிழர்
கரையேறி வாணிபத்தில் சிறந்து நின்றார்!
வலம்மாறி இடம்மாறிப் போனதாலே
வறுமைக்குள் சிக்கிநின்று வாடிப் போனார்!
அலைமாறிப் பாய்கின்ற கடலே உன்நீர்
அனுதினமும் அழுகின்ற அடிமைத் தமிழர்

கலம்கலமாய் வடிக்கின்ற கண்ணீர் பாய்ந்து
கரிக்கின்ற உப்பாக மாறிப் போச்சோ!

தோல்விகளைக் கண்டஞ்சா கொள்கை யாவும்
துவண்டுவிழும் உன்னலையில் கற்றுக் கொண்டேன்
வில்வளைத்து வியக்கவைக்கும் வானந் தன்னில்
மழைமேகம் கடல்நீரே மாறக் கண்டேன்
வல்லமைக்கொள் நெருப்புக்கோள் கதிரோன் உன்னில்
மாலைவர மூழ்கியதும் குளுமை கொஞ்சும்
பால்நிலவாய் குளித்துவந்த புதுமை யல்லால்
பாற்கடலை மோர்கடலை கண்டதே இல்லை!
செந்தமிழர் சங்கமதைப் பூம்புகார் நகரை
சீர்மேவும் லெமூரியாவை விழுங்கிய தென்ன?
சொந்தமிலா ஆதிக்க மொழிக ளெல்லாம்
சுயமாக நடமாட விட்ட தென்ன?
எந்தமிழர் இருக்கின்ற இடங்கள் எல்லாம்
இடையிடையே நடுவிருந்து பிரிக்கும் கடலே!
நொந்தழிந்து போனாலும் தமிழர் இதயம்
ஒன்றெனவே புரியாமல் போன தென்ன?





# ஆடிவரும் இளமை

பாடுநிலா போலுடம்பு தேடுமெழில் பாலரும்பு
ஆடையிலே பாவையுடல் மேடு! - இது
ஆடையிட்டு மூடிவைத்த கூடு!

காடுமலை ஏறிவரும் காவிரியின் நீரெனவே
காமச்சுவை யூறிவரும் கேனி - இது
கேடுவர கூட்டிச் செல்லும் தோணி!

காலையிலே பூத்திருக்கும் கள்நிறைந்த மலரெனவே
காதலுக்குக் கடைவிரிக்கும் கனவு - இது
சேலைக்குள்ளே உருவான உணவு!

மானிருக்கும் மீனிருக்கும் கண்களிலே நானிருக்க
மோகவழி ஆடிவரும் இளமை - இவள்
மேனியெழில் போதை தரும் புலமை!

பார்வையில் நோய்கொடுத்துப் பாசமுடன் சேர்த்தணைத்துப்
பாவ வழி கொண்டு விடும் பெண்மை - இது
பார்த்தறிந்தோர் சொல்லிவைத்த உண்மை!





# காதலைப் பாடு குயிலே!

காதல்காதல் காதலென்று சொல்லுவார்கள் - அது
காதலில்லை காமமென்று பாடுகுயிலே!
காதலுள்ளம் கொண்டவர்கள் யாருமில்லை - அந்தக்
காலமும் போனதென்று பாடுகுயிலே

சேலை தலைப்பினிலே சிக்கித் திரிந்து - நல்ல
சேல்விழியர் மேல்விழுந்து தேடும் மருந்து
நாளை விடிந்தவுடனே நாறும் உடம்பு - அது
நலமிழந்து போகுமென்று பாடுகுயிலே!
மையணிந்த கண்களிலே மையல்காட்டி - சட்டைப்
பையளக்கும் காலமென்று பாடுகுயிலே!
பொய்யளந்து பேசுவோர்கள் கூட்டமென்று - நீயே!
பறந்து வந்து விடுதலைக்குப் பாடுகுயிலே!

கைப்பிடித்த கண்ணகியின் காவியப்பண்பும் - நல்ல
கயல்விழி மாதவியின் காதல் வழியும்
நெய்மணக்கும் குழல்கொண்ட கோப்பெருந்தேவி - கண்ட
காதல்தமிழ்க் காதலெனப் பாடுகுயிலே!



# கைம்பெண்

நெஞ்சத்தில் தாலியைத்தான் பறித்தார்; அந்த
　நெற்றியிலே திலகத்தை ஏனோ அழித்தார்?
மஞ்சத்து எழில்நிலவு, மணந்தரு மலரை
　மகிழ்ந்துதலை சூடிடவே கூடா தென்றார்!
கொஞ்சித்தான் பேசுகின்ற குலவு தமிழைக்
　கூசாமற் கூறிவிட்டார் கைம்பெண் என்றே
நெஞ்சத்தேன் சுமந்துவரும் இளமை தன்னை
　நெருங்கிடவே தடையுமிட்டார் நேர்மை இல்லார்!

சின்னஞ்சிறு வயதினிலே கைம்பெண் ணாகிச்
　சிறைவாழ்க்கை நடத்திடவோ பெண்மை, கூறு!
இன்பத்தின் எல்லைக்குள் கன்னி யவளோ
　இனிநுழைய இடமின்றிக் காவல் வைத்தார்
தன்மனைவி இறந்தபின் கணவன் என்போன்
　தனியொருத்தி சுகங்கண்டே வாழ்க என்பார்
தன்கணவன் இறந்தபின் மனைவி மட்டும்
　தளிர்வாழ்க்கை இளவயதில் கூடா தாமே!

வளர்கின்ற உணர்ச்சிகளை முளையில் கிள்ளி
　வளையிழந்து பொட்டிழந்து கண்ணீர் சிந்த
புலர்கின்ற பொழுதொன்றும் அவளுக் கில்லை
　புலம்பலிலே தன்வாழ்க்கை முடிக்க வேண்டும்
மலர்கின்ற நினைவுகளின் இளமைக் கூற்றை
　மனத்துக்குள் முடக்கிடவோ மலரும் பெண்மை!
அலர்மனிதர் செய்திட்ட பொய்மைச் சட்டம்
　ஆண்களுடைய சதியென்றே புரிந்து கொள்வீர்!



# இது ஒரு நாடகம்

காதலுக்குக் காவலென்று காதையிலே எழுதிவிட்டு
வீதியிலே போகின்ற பெண்ணை - வெறிக்கும்
நீதியிலார் காமவழிப் பண்ணை!

நிறைபயின்ற ஞானிகளும் நரைமுதிர்ந்த மானிடனும்
கறைபடிந்த கற்பனையில் வீழும் - இது
திரைப்படத்தை நாடியோடும் காலம்!

சாதியில்லை என்றுசொல்லி வீதியிலே முழக்கமிட்டுச்
சாதிப்பெயர் சொல்லிக் கேட்பார் ஓட்டு - சம
நீதிக்கு வைத்திடுவார் வேட்டு!

பணமான வருமானம் வெகுமானம் தனைப்பெருக்கி
பிணமான பேர்வழிகள் தூ! தூ! - இது
இனமானம் இல்லார்கள் கூத்து!



# மடமையென்ன மடமையோ?

விண்ணிருண்டு போனதென்று
வெளியில்வந்த வெண்ணிலா
வீதிவந்து ஒளிபரப்பிக்
கோலங்காட்டி நிற்கையில்
ஒன்றிரண்டு மூடர்கூடி
ஒளிநிலவைத் தன்னதாய்
உரிமைக்கேட்டு புலம்பிநிற்கும்
மடமையென்ன? மடமையோ?

உருவமில்லா உருவைத்தூக்கி
உருளுகின்ற தேரினில்
ஊரைக்கூட்டி இழுத்துவந்து
வேடிக்கை செய் மாந்தரே!

இருவர்கூடி செய்துவைத்த
இதயவாசல் தன்னிலே
இறைவன்வந்து குடியமர்ந்த
இயல்புமறந்து போனதேன்?



# நச்சுக் கொடிகள்

உழைத்தாலே உணவென்று
உழைப்பின் மேன்மைதனை
உலகுக்குச் சொல்லிவிட்டு

உழைக்காமல் சன்யாசி
உல்லாசம் தேடியே
வேடங்கள் புனைவதென்ன?

விட்டத்தில் பாய்கின்ற
வேடிக்கை நாயைப் போல்
வித்தைகள் சொர்க்கமென்று

சட்டத்தை மதியாமல்
சோம்பேறி வாழ்வினில்
சுகபோகம் காண்பதென்ன?

மற்றவர் உழைப்பையே
காணிக்கையாய்த் தின்று
மேனிகொழுத் தவன்தான்
கற்றவர் தம்மையும்
காலில் விழவைத்துக்
கடவுளைத் தேடுவதோ?

குழந்தையோ மனைவியோ
குடும்பமோ பாசமோ
கொஞ்சமும் நெஞ்சிலின்றி

பழந்தமிழ் நாட்டினில்
பொறுப்பின்றித் திரிதிடும்
பரதேசி கூட்டமடி!

வேலைஏது மின்றி
வெட்டியாய் சுற்றிடும்
வெறும்பயல் கூட்டமெல்லாம்

கடவுளின் வீட்டுக்குக்
கன்னக்கோல் போட்டுநான்
கூட்டிச் செல்வேனென்பான்

அந்த உலகிற்கு
வழிகாட்ட வந்ததாய்
ஆயிரம்பொய் கூறல்

இந்த உலகையே
ஆட்டிப் படைத்திட
எண்ணிடும் மோசடியே!

செத்தாரை ஒத்ததைப்
போலிருக்கும் இந்த
சித்தானை குட்டிகட்

சித்திரக் கார்களும்
சொகுசான வாழ்க்கையும்
சொந்தங்கள் ஏனடியோ!

மொத்தமாய் கடவுளைக்
குத்தகை எடுத்திட்ட
முனிவர்கள் கூட்டமிங்கு

சித்துக்கள் என்பதும்
செப்படி என்பதும்
மோசடிக் குற்றமடி!

காவியைக் கண்டதும்
காலடி விழுகின்ற
காட்டு மிராண்டிகளே!

சாம்பலைப் பூசியே
சாகசம் படைத்திடும்
சாகசக் காரர்களும்

கூப்பிய கையினுள்
தேக்கிய கஞ்சாவில்
தியானங்கள் செய்பவனும்
நாளை யொருநாள்
நாட்டுக்குத் தலைவன்
நான்தான் எனக்கூறி

வாளைத் தூக்கிடும்
நாளுமே வந்திடும்
எச்சரித்தேன் தம்பி!

காசுக்குக் குறிசொல்லி
பூசைகள் செய்திடும்
காலிகளும் உண்டு

காமத்தில் மூழ்கியே
கடவுளைத் தேடிடும்
கயவர்களும் உண்டு

நாட்டுக்குள் இவரெல்லாம்
நச்சுக் கொடியென
நீக்கியே வாழ்தல் நன்று!

கழனியில் பயிருக்குள்
களையென இவர்களைக்
களைந்திடுவாய் இன்றே!

(வேறு)

சாமியாராய் வந்தவனின்
சரித்திரத்தை ஆராய்ந்தால்
சதித்திட்டம் புரிந்துவிடும்!

சன்யாசி கோலத்தின்
சதிராட்ட உல்லாசம்
சடுதியில் தெரிந்துவிடும்!

# வீதிதொறும் பாவேந்தர் மன்றம் காண்போம்!

வஞ்சகத்தால் வாழ்விழந்த வீரத் தமிழர்
　வெந்தழிந்து மடிவதையே கண்டு நொந்து
அஞ்சேலெனப் போர்க்கவிதை வெடியே வைத்து
　அறியாமைக் கோட்டைகளைத் தகர்த்தெ றிந்தார்!
நெஞ்சகத்தில் தமிழ்த்தாங்கி நேர்மை தாங்கி
　நெடுஞ்சுவராம் மூடர்மதி இடித்து தள்ளி
கொஞ்சிடுக கொள்கைவழி தமிழால் என்றே
　கனற்கவிதை பாவேந்தர் பாடி வைத்தார்!

ஆண்டஇனம் மாண்டதெப்போ? மீண்டு வா! வா!
　அடிமையாம் விலங்கொடித்து ஆளுகைச் செய்வாய்!
வேண்டாத சாதிகளால் பிரிந்து நின்றும்
　வேடிக்கை விளையாட்டை விட்டு விட்டு
கூண்டோடு ஒற்றுமைக்குள் கூடி நின்றே
　குவலயத்தில் தமிழ்ப்பெருமை முழக்கம் செய்வாய்!
பூண்டோடு நமையழிக்கும் அறியா மையைப்
　புறங்காட்டப் புறப்படுக! புயலாய் நீயே!

பாடுபடும் தொழிலாளர் வாழ்வைக் கண்டு
　பகுத்தறிவால் விழித்தெழவே செய்தார் கவியால்!
நாடுநலம் பெறுகவென்று உணர்வை யூட்டி
　நல்லதொரு பல்கலையாம் குடும்பம் என்றார்!
வீடுமனைச் சுற்றமொடு வந்தி ருந்து
　வீதிதொறும் பாவேந்தர் மன்றம் செய்வோம்!
கேடுமதி கொண்டோரின் சூழ்ச்சி தள்ளி
　கொள்கைவழி முழக்கமிட்டு ஒன்றாய் நிற்போம்!



# புரட்சிக் கவி வழியில்...

பொதிகைமலை தாவிவரும் தென்றலெனும் காற்றில் ல்
புரட்சிக்கவி பாடியநல் புத்தெழுச்சிப் பாட்டால் ய்
விதிவழியின் அறியாமை சருகாகிப் போக
விரைந்திட்ட பகுத்தறிவுச் செந்தீயின் வீச்சாய்
அதிமதுரத் தமிழமுதை அகமகிழ மாந்தி
அழகுமிழும் கவிபொழியும் அருளுருவின் திருவாய்
புதியதொரு குமுகாயம் பகையின்றி அமைய
படைகொண்ட தமிழ்நேசன்! பாரதியின் தாசன்!

கருத்தொத்த காதலுக்குக் கவிதைகள் பாடி
கருப்பாதைச் சாத்தென்ற கணக்கியலின் அறிஞன்!
வெறுத்தொதுக்கும் பழமைகளை வேருடனே வளர்த்து
வேண்டாத சாதிகளில் விளையாடிக் களிக்கும்
கருத்தமனங் கொண்டோரைக் கதிகலங்கச் செய்து
கவிதையெனும் தகரியினால் தகர்த்தெறிந்த கவிஞன்!
திருவிழந்த பெண்களுக்கு மறுமணங்கள் தழைக்க
தன்னுரிமை பெண்ணுரிமை தனியுரிமை கண்டார்!

வெஞ்சிறையாம் அறியாமைக் கதவுகளை உடைத்து
வெற்றிகொள வெளியே வா! பாவேந்தர் வழியே!
துஞ்சலினி இல்லையெனத் துடித்தெழுக தமிழா!
துயர்நீக்கித் தமிழ்மானம் காப்பாற்று வாயே!
வஞ்சமிகு கொண்டுழலும் வண்டமிழின் பகைவர்
வாலாட்டம் போக்கிநீ தூளாக்கிக் காட்டு!
அஞ்சாமல் படைநடத்த பாவேந்தர் உண்டு
அவர்கவியால் இனமானம் விழித்தெழவே செய்க!

**(22.9.91-ல் மலேசியாவில் வெளியான பாவேந்தர் பாரதிதாசன் விழா மலரிலிருந்து)**

---

✱ தகரி = பீரங்கி

# நாட்டின் நலன்

உலகத்து வீதிகளில் வா!வா! நண்பா!
உலவுகின்ற மனிதர்களின் உழைப்பைப் பாராய்
கலகத்தில் திளைத்திருந்த நாடுகள் யாவும்
கடுவேக வளர்ச்சியிலே செழிப்பதைக் காண்பாய்
நிலவினிலே ஏறிநின்று வெற்றிக் கொடியே
நாட்டுகின்ற விஞ்ஞான வளர்ச்சிப் பாராய்!
பலகற்றும் கல்லார்போல் பதுங்கல் நன்றோ?
புறப்படுவாய் நாட்டுநலன் காத்திட இன்றே!

நாட்டுநலன் காத்திடநீ செய்வ தென்ன?
நம்நாடு தழைப்பதிலுன் கடமை என்ன?
வீட்டுக்குள் அறிவதனைப் பூட்டி வைத்து
விடியாத அறியாமை இருளில் சிக்கி
ஆட்டுக்கு வளர்ந்துவிட்ட தாடிப் போன்று
அடுக்கடுக்காய் சாதிகளை வளர விட்டு
கேட்டுக்குள் சமுதாயம் கேள்வி யின்றி
கெட்டழிய விட்டதென்ன நியாயம் சொல்வாய்?

வாயினிலே வெற்றுரைகள் பேசிப்பேசி
வாதங்கள், தத்துவங்கள் உரத்துக் கூவி
காயினிலே கரிப்பினிலே துவர்ப்பு இனிப்பு
கவனமுடன் மனமதனைச் செலுத்தல் அல்லால்
தாயினுக்கோர் துன்பமென்றால் துடித்தல் உண்டா?
தன்னாட்டு நலமதனைப் பேணல் உண்டா?
நாயினுக்கும் கீழாக மனிதர் தம்மை
நடத்துகின்ற தன்மையுமேன் சொல்வாய் இன்று!

மலையுண்டு ஆறுண்டு தோப்பும் உண்டு!
மண்வளமும் பொன்வளமும் நிறைய உண்டு!
அலைசூழ்ந்து எழில்கொஞ்சும் பெருமைஉண்டு
அடடாவோ! கனிவளங்கள் இங்கே உண்டு!
தலைசிறந்து விளங்குதற்குத் திறமை இருந்தும்
தவிக்கின்ற வறுமையிலே வாடுதல் நன்றோ?

கலைசிறந்த நாட்டிலேன் துன்பம் நண்பா?
   கடுகிவா களையெடுப்போம் நாடு சிறக்க!

பகைவந்து சேராநல் லாண்மை வேண்டும்
   பழிவந்து சேராநல் துணிவு வேண்டும்!
நகைமுகத்து அமைதியே நிலவ வேண்டும்
   நாட்டுநலன் காக்கின்ற நினைவு வேண்டும்
வகையாக உழைப்பிங்குப் பெருக வேண்டும்!
   வயிறாற உணவிங்குக் கிடைத்தல் வேண்டும்!
தொகைதொகையாய்ப் பெருகிவரும் மக்கள் தொகையே
   தினந்தினமும் குறைத்துவளம் சேர்க்க வேண்டும்!



# முரண்பாடு

கண்ணாடி துண்டொன்றைக்
கவர்ச்சிமிகு வைரமெனக்
காட்சிக்கு வைத்துவிட்டால்

முன்னாடி ஓடிவந்து
முழுதாக ஒப்பிநிற்கும்
மூடர்களின் முன்னே நின்று

கண்ணான தத்துவங்கள்
கனிவான அறிவுரைகள்
கோடிகோடி சொன்னபோதும்

கற்பூர வாசனையைக்
கண்டறியாக் கழுதையென
கொஞ்சமும் புரியா நிலையில்

முன்னுக்கும் பின்னுக்கும்
முழுவதுவும் சுயநலத்தில்
முரண்பட்டு வாழும் இவரே!

மண்ணோடு மண்ணாகி
மடிகின்ற வெறுங்குப்பை
மதியற்ற குட்டிச் சுவரே!

அருள்பாடி பொருள்பாடி
அகம்பாடி புறம்பாடி
அழகொளிரும் தமிழ் பாடி

அடிதோறும் சந்தங்கள்
அடுக்கடுக்காய் நடனமிட
அருளாளன் புகழ் பாடி

பொருளுக்கும் பதவிக்கும்
பல்லிளித்துத் தடுமாறி
பலநூறு கவிப்பாடி

பொல்லாத சமுதாயப்
பொல்லாங்கைக் கூறாமல்
பொல்லார்க்குப் பின்பாடி

அறியாமை இருளுக்குள்
அறிவார்ந்த வெளிச்சத்தை
அறியாமல் தேடும் மனமே!

அநியாயம் செய்வோரின்
அகந்தையது பொடிபடவே!
ஆர்த்தெழுந்து பாடுதினமே!



# மனதிற்குள் ஆசை வந்தால்

மனதுக்குள் ஆசை வந்தால்
மதிகெட்டுப் போகும் முன்னால்
தனதென்ற எண்ணம் தோன்றும்
தானென்ற மமதைப் பிறக்கும்

கனவாகிப் போகும் கல்வி
கரைந்தோடிப் போகும் குணங்கள்
பணம்பண்ண ஏங்கிச் சாகும்
பகுத்தறிவு தானாய்ப் போகும்!

மனதிற்குள் ஆசை வந்தால்
வானத்தை வளைக்கத் தோன்றும்
கனவுக்குள் பறந்து வந்து
குவலயத்தைக் கைக்குள் அடக்கும்

குணமான பாசம் மறக்கும்
கொள்கையெல்லாம் காற்றில் பறக்கும்
மனிதனின் ஆசைக் கிங்கே
முடிவில்லை எல்லையு மில்லை!





# பெண்ணடிமைக் களைக!

எழில்கொஞ்சும் மலர்போலும் பெண்ணினத்தை ஏய்க்க
என்னென்ன வழக்கமடி, கணவனவன் மாண்டால்
அழல்நெருப்பில் உயிர்மாய்க்க உடன்கட்டை ஏற்றி
அழகுதரும் கூந்தலினை மொட்டையாய் ஆக்கி
இழிவுபடும் செயல்தனில், இடறிவிழ வைத்து
இளம்பருவ மணம்செய்து அடிமையாய்க் கொள்வார்
கழிவுஎனக் கருதுகின்ற கொள்கையை நாடி
கொடுமைகள் செய்கின்ற கயவரையே வெல்வீர்!

மலரினிலே தேனெடுக்க, எடுக்கையில் கூலி
மலரிடமே கேட்பதில்லை; ஆறறிவு கொண்ட
அலர்மனிதர் மட்டுமிங்கு இளமைத்தேன் துஞ்சும்
அழகுமிழும் மங்கையை மணப்பதற்குக் கூலி
பலமுறவே கேட்கின்றார்; மணக்கொடையாம் என்றே
பகற்கொள்ளை அடிப்போரைக் கண்டுபயம் வேண்டாம்!
நிலமதிலே ஆண்களுடை ஆதிக்க திமிரை
நிறுவிடவே முனைகின்ற செயலெதுவோ சாய்ப்பீர்!



# வண்ணமலர்ப் பேரழகே!

வண்ணமலர் தோட்டத்தில் வந்துவிளை யாடி - ஒரு
பெண்ணிலவு போலவுரு கொண்டு எனை நாடி
கிண்ணமதில் கள்ளெடுத்துக் கொள்ளையின்பம் தரவே - என்
கன்னமதில் இதழ்தடவும் கன்னியிள மலரே!

கொல்லும்விழிப் பார்வையிலே கொல்லிமலைத் தேனே! - அதை
அள்ளிவந்து நான்குடிக்க ஓடிவரு வேனே!
கள்ளமிலா என்மனத்தில் கன்னியுரு கொண்டே - அங்கு
மெல்லவந்து பூத்ததடி முல்லைமலர்ச் செண்டு!

மேகமெனும் கார்குழலில் மேனிமறைத் தாயே! - கரு
நாகமெனும் பார்வையிலே நடுங்கவைத் தாயே!
மோகமினும் தீரவில்லை மேவிவருவாயே! - கொடுந்
தாகமெனைக் கொல்லுதடி தீர்க்கவருவாயே!

நெஞ்சமெலாம் உன்னினைவு நாடுமெழிற்சிலையே - இந்த
மஞ்சமெலாம் நீயிருந்து மணம் பரப்பும் கலையே
வஞ்சமிலா வஞ்சிநீ வந்தணைக்கும் குளிரே! - கண்ணில்
அஞ்சனமே தீட்டியதில் ஆட்டிவைக்கும் மலரே!

சிந்துகவி பாடவந்தேன் சின்னஇள ராணி - எழில்
சிந்தும்கவி தந்திடும் உன் மின்னல் இள மேனி!
பந்தெடுத்தே ஆடவந்தேன் பைந்தமிழின் தேனீ - அதை
வந்தெடுத்துத் தந்திடுவாய் வண்ணமல ரேநீ!



# வீரவுரை எதற்கு?

உழைப்பதற்கு மனமின்றி உணவருந்த வருவோர்க்கு
உடலில்வெறும் சதைவளர்க்கும் உணவுதான் எதற்கு?
பிழைப்பதற்கு வழிதெரிந்த பித்தலாட்டக் காரருக்குப்
படிப்பறிவு பெற்றுத்தரும் பகுத்தறிவுதா தெனற்கு?
அழைப்பெதற்கு? அணிவகுக்கும் தன்மானம்
விழித்தப்பின்!
அணைப்பெதற்கு? அறிவார்ந்த போர்தொடுக்க
முனைந்தப்பின்!
குழைந்துவந்து வாலாட்டும் கொள்கையிலா மனிதர்க்குக்
கொடுக்கின்ற எலும்பின்றி வீரவுரை எதற்கு?

மூவாசை துறந்திட்ட பற்றற்ற ஞானியர்க்கு
மாவேந்தன் போலுலகில் மாளிகைதா னெதற்கு?
தேவாரம் படித்திட்டு திருநிலையில் இருப்போர்க்குத்
திரளான செல்வமுடன் அறுசுவையும் எதற்கு?
ஆவாரம் காட்டுக்குள் ஆடிவரும் பாம்புக்கு
ஆகாத நெருப்புடனே அருச்சனைகள் எதற்கு?
பூவாமல் காய்க்காமல் புரையோடிப் போனமரம்
பூந்தோட்ட நடுவினிலே இருப்பதுவும் எதற்கு?

துணையின்றி நடமாட முடியாத கோழைக்குத்
திறமிக்க தளபதியின் திருவேடம் எதற்கு?
சினமோடு சீறிவரும் சிங்கத்தின் முன்னாலே
சிறுநரிபோல் செயல்மேவும் தந்திரந்தான் எதற்கு?
கனவோடு வாழ்கின்ற கற்பனையில் நிலைத்தோர்க்குக்
கரடான பாதையிந்த வாழ்வுதான் எதற்கு?
பிணமான மனிதர்க்கு இனமானம் எதற்கு?
பகுத்தறிவு இல்லார்க்குப் படிப்புதான் எதற்கு?

# பாப்பாவுக்கு ஒரு சொல்!

சாதிகளே இல்லையெனக் கூச்சலிடுவோம் -பாப்பா
சான்றிதழில் பள்ளிகளில் பதிவு செய்வோம்!
வீதியெங்கும் சாதிமன்றம் அமைத்திடுவோம் - தேர்தல்
வந்தாலே சாதிப்பேரால் வாக்களிப்போம்!
தெய்வபயம் மிக்கதிந்தப் புண்ணியபூமி - பாப்பா
தெருவெங்கும் காட்சிதரும் கோயில்சாமி
பொய்யளவும் புனைசுருட்டும் கொலைகளவும் - உலகில்
பெருக்குவதில் பெருமையுறும் எங்கள்பூமி!

கல்விக்குக் கடவுளிந்த நாட்டிலுண்டு! - கல்வி
கற்காத தற்குறிகள் முதன்மைகொண்டு!
நல்வித்தை கற்காத மூடரெல்லாம் - நம்
நாட்டினிலே ஞானியெனத் திரிவதுண்டு!

கண்டதெல்லாம் தெய்வமெனக் கையெடுப்போம் - இங்கு
கொண்டதெல்லாம் கோலமெனக் கொண்டிருப்போம்
விண்டதெல்லாம் உண்மையென நம்பிடுவோம் - வீணில்
வெற்றுரைகள் பேசிப்பேசி பகைவளர்ப்போம்!

குருட்டாட்ட வழிகளையே அடைத்திடுவாய் - பாப்பா
குறள்வழியே பகுத்தறிவின் வழிகாட்டுவாய்!
திருட்டாட்ட கொள்கையிங்கு பொடிபடவே! - பாப்பா
திறமோடு நம்நாடு செழிக்க வைப்பாய்!





# நிலாவே நீ நில்!

இளவேனில் நிலவே நீ நில்! - என்
இளமைக்கு விருந்தாகிச் செல்!
களமேறி பாய்கின்ற வில்! - உன்
கனிவாயில் தவழ்ந்தாடும் சொல்!

விளையாடி மகிழ்ந்தாடும் வான்! - உன்
வரவுக்குக் காத்திருப்பேன் நான்!
இளமேனி தழுவாத பூண்! - நீ
இரவோடு பாய்கின்ற தேன்!
குழைவோடு நகர்கின்ற தேர்! - நர்ன்
குடியேற தவிக்கின்ற ஊர்!
இழைக்கூந்தல் முகில்கொஞ்சும் கார்! - அதில்
இழைந்தாடும் என்மனதைப் பார்!

வளமேவும் முல்லைப்பூ பல் - நீ
வளைந்தாடி பிறையாகும் வில்!
இளமானே தேனமுதக் கள்! - என்
இதழூறிக் குடித்ததுமே செல்!



# விண்மீன் (STAR)

விண்ணில் தவழும் தாரகையே! - அந்த
விட்டில் மின்மினி மறுபதிப்பே!
சின்னக் குழந்தையின் கண்களிலே - உந்தன்
சிரிப்பின் மின்மினி காண்கின்றேன்!

எண்ணி லடங்கா வைரங்களை - வானில்
எடுத்தே எறிந்தவன் யாரம்மா?
மண்ணில் எரிந்தே விழும்போது - உந்தன்
மறைவிடம் எனக்கும் காட்டம்மா!

சீறிடும் கடலுள் மூச்சடக்கி - பாண்டியன்
சேர்த்துக் குவித்த முத்துக்களோ?
சீறிய கண்ணகி சிலம்பிருந்து - வாயில்
தெறித்துச் சிதறிய மாணிக்கமோ?

உழைப்போர் உடலில் அரும்பி நிற்கும் - அந்த
வியர்வைத் துளிகளின் காட்சியதோ!
உழைப்பால் கடல்மேல் வலைவீச - அவர்
வலையில் தப்பிய மீனினமோ?

காதலி யவளின் விழிகளிலே - உன்
கண்ணிமைச் சிமிட்டலை அறிகின்றேன்!
சாதனைத் தமிழர் ஒற்றுமையில் - உந்தன்
சிதறிய நிலையை உணர்கின்றேன்.
வானில் இரவின் கருப்பழிய - ஒளி
விட்டு ஒளிரும் விண்மீனே!
வீணில் உன்னில் பலன்கூறி - இங்கு
வயிறு வளர்ப்பதை அறிவாயா?

திரையில் ஒளிரும் விண்மீனும் - வானத்
திரையில் ஒளிரும் பண்பாமோ?
விரைவில் இவர்புகழ் மங்கிவிடும் - என்றும்
விண்ணில் உன்னொளி நிலைத்திடுமே!



# நெஞ்சம்

பொறுமையின் சிகரம் நெஞ்சந்தான் - அது
புகழினைத் தாங்கிடும் மஞ்சந்தான்!
வறுமையில் வாடிடப் போரிடுமே! - அது
வன்முறைக் கூடமாய் மாறிடுமே!

சிறையென ஆயிரம் எண்ணங்கள்! - அங்கு
சூழ்ந்தெனைத் தாங்கிடும் சின்னங்கள்!
இறைவனின் இருப்பிடம் இதயந்தான் - அலகை
இணைந்திட துடிப்பதும் அதிலேதான்!

சுமையாய் கவலைகள் தூங்கவிடும் - அது
சுகமாய் காதலில் ஏங்கவிடும்!
இமைப்போல் ஓய்வே இல்லாமல் - எனை
இயக்கிடச் செய்யும் நில்லாமல்!

இருட்டும் வெளிச்சமும் அதனுள்ளே - வரும்
இன்பமும் துன்பமும் அதனுள்ளே!
திருட்டும் புரட்டும் செய்வதெல்லாம் - மனம்
தூண்டிய வழியின் மறைபொருளே!

காட்டில் வாழும் நரிபுலியும் - மனக்
கூட்டில் உறைவதும் புரியாதோ?
ஏட்டில் எழுதிடும் கவிதையெலாம் - மனம்
எழுதிய சிந்தனைத் தூரிகையே!

நண்பனும் பகைவனும் எனக்குள்ளே - இதயம்
நடத்திடும் போர்களும் எனக்குள்ளே
அன்பெனும் ஆளுகை வந்தாலே - அது
அமைதியில் தூங்கிடும் தன்னாலே!





# இருளின் தூதர்கள்!

கொல்ல வரிப்புலி வருவதைக் கண்டால்
கூச்ச லிட்டுநீ கதறாதே!
வெல்லும் வழிகளை அறிந்தால் அதையும்
வெளிப்படை யாகச் சொல்லாதே!

நல்லவை கெட்டவை எதுவாய் இருப்பினும்
நான்கு பேர்முன் இயம்பாதே!
உள்ளதைச் சொன்னால் உணரார் என்றே
உனக்கு மட்டுமே நான்சொன்னேன்!

ஈனனைக் கண்டு புத்தியைச் சொன்னால்
இல்லிடம் பாழெனத் தெரியாதா?
வீணே பொழுதினைக் கழித்திடும் இவர்தம்
வாழ்வின் நிலையோ வேடிக்கை!

காடும் மேடும் மலையும் சுற்றிக்
கடவுளைத் தேடும் மூடர்கள்!
தேடும் கடவுள் உள்ளம் உறைவதை
தெரியா இருளின் தூதர்கள்

சாவில் துடிக்கும் மனிதரைக் கண்டு
சிரித்து மகிழும் உள்ளங்கள்!
‘கோ’வெனக் கதறிச் செத்ததும் சிலைகள்
திறந்திடும் தன்னலப் பள்ளங்கள்!
கண்ணில் பட்டதைக் கவர எண்ணிடும்
கயமை நெஞ்சின் கசடர்கள்!
உண்மையைச் சொன்னால் உணரார் என்றே
உனக்கு மட்டும் நான்சொன்னேன்!

எருக்கம் மலரினைப் பன்னீர் மலரென
ஏற்கும் இவர்கள் முன்னாலே

தருக்கம் செய்தும் தரணியை வென்றும்
தீர்ப்பாய் எதுவும் ஆவதுண்டோ?





# எரிமலை

எரிமலை இங்கே வெடித்தது பாரீர்!
''எட்னா'' வென்னும் எரிமலைப் பொங்கி
எரிதழல் எங்கும் நீராய்ப் பாய
எங்கும் நெருப்பு, எங்கும் நெருப்பு!
விரிந்து வளர்ந்த புதர்கள், செடிகள்
வளையா மரங்கள் தீயில் கருகி
எரிதழல் பாய்ந்து ஊரின் உள்ளே
இத்தாலி மண்ணின் ''செசிலி'' தீவே!

வறியோன் நெஞ்சில் எழுந்த கனவு
வெடித்துச் சிதறும் பான்மை போல!
தெறித்துச் சிதறும் மலையின் கற்கள்!
தெளிவாய்த் தெரியும் தீயின் ஒளியே!
அறிஞர் பலரும் ஓடி வந்தனர்
அழிவைத் தடுக்கத் திரண்டு நின்றனர்!
மறைவாய் இருந்த நெருப்புப் பரல்கள்
மனிதனின் ஆற்றலைக் காண வந்ததோ?

பசித்தவன் வயிற்றில் எரியும் நெருப்பே
போட்டியாய் எரிய புவிக்கு வந்ததோ?
நசுக்கும் அடிமை எண்ணம் எரித்தே
நலமுறும் விடுதலை கேட்க வந்ததோ?
'செசிலி' தீவின் தீயின் நாக்கே
தன்னலம் பேணி வஞ்சக எண்ணம்
கசிந்திடும் நெஞ்சில் கனலைச் செலுத்து
கயமைச் செயல்கள் பொசுக்கிக் காட்டே!

(செய்தி: 23.9.89ல் இத்தாலி நாட்டின் 'செசிலி'த் தீவில் எரிமலை வெடித்தது.)

# புரியாத வாழ்வு!

எங்கே வழிகள்? எங்கே தடங்கள்?
எல்லாம் இருளாய் தெரிகிறதே!
எங்கே வானம்?எங்கே உலகம்?
எப்படி நானும் பறந்திடுவேன்!

சிறகினை அடித்துப் பறந்திடவே
சிதறிய ஒளியும் தெரியாதா?
இறப்பின் மஞ்சம் ஏறுமுன்னே
இருளும் கொஞ்சம் விலகாதா?

போவதோ தூரம் தூரந்தான்
பொய்மையைச் சுமந்திடும் பாரந்தான்
ஆவதும் அழிவதும் கூடவில்லை
ஆசைக்குள் சிக்கினேன் பாவமில்லை.

கோயிலின் விளக்கில் தேடுகின்றேன்
கோரிய நிம்மதி கிடைக்கவில்லை!
வாயிலின் மணியொலி ஓசையிலே
வாழ்வின் நெறிமுறைக் கேட்கவில்லை!

அருளெனும் இரக்கம் சுரக்காதா?
அன்பொளி அதனில் பிறக்காதா?
இருளும் பகையும் மறையாதா?
இனியும் வாழ்க்கைப் புரியாதா?





# திருமணச் சந்தை

வனவிலங்குக் கொண்டாட்டம் சென்ற வாரம்
வகைவகையாய்ப் பார்த்திங்கு வந்த கூட்டம்
மணமகளைத் தேடிவந்து காட்சிப் பொருளாய்
மகிழ்வோடு பார்த்துவந்த பொருள றிந்தேன்!
குணமான பெண்ணவளைக் கூடி நின்று
குயிலென்றும் மயிலென்றும் கிளியே யென்றும்
புனலாடும் மீனென்றும் மானே என்றும்
புகழ்ச்சொல்லைச் சொன்னதாலோ காண வந்தார்!
எத்தனை பேர் வந்தாரோ கண்ட றியேன்
எழில்மங்கை என்னிடத்தே வநது நின்றே
வித்தைகளைக் காட்டென்றார்; வேடிக்கைப் பார்த்தார்,
விலைபேசி மணமாலைக் கழுத்தி லிட்டார்! ர்!
மொத்தமாய் பிள்ளைக்கொடை என்ற பேரில்
முன்னமேயே வாங்கிவிட்டார் ஆயுள் சந்தா!
பித்தனை போல் பின்னும் ஏன் புலம்பி நின்றார்?
பெண்ணவளைப் புலமைக்குள் புதைத்து வைத்தார்!

கன்னியெந்தன் விழிகளிலே சுற்றிக் காணும்
கரையோர உப்பளங்கள் கண்ட தாலோ
பெண்களையே மயக்கிவிட கற்ற வார்த்தை
பெரும்பங்கு வகித்திருக்கும் கவிஞர் வாயால்
கண்களையே கடலென்றார்; சுழன்ற லையும்
கார்கூந்தல் கடல்மேவும் அலையே என்றார்
தண்மலரே, தளிர்பாவாய் என்பதெல்லாம்
திருமணத்துச் சந்தையிலே விற்ப தற்கோ?



# இது ஒரு மயக்கம்!

என்னடி என்னடி சின்ன பொண்ணு
எந்நேரம் பார்த்தாலும் என் நெனப்பு
கண்ணுக்குள் என்னடி புன் சிரிப்பு
கண்ணாடி கன்னத்தில் பொன் சிவப்பு

மின்னலின் கீற்றுக்கள் பல்லிடுக்கில்
மின்மினி சிந்திடும் உன்மயக்கில்
கன்னலின் சாறுந்தன் தேனிதழில்
காவிய மாகுதென் வாய்மலரில்

முன்னடி பின்னடி நீநடந்தால்
விம்மித் தணியுது வான்கனிகள்
என்னிலே என்னடி கண்டு கொண்டாய்
உன்னையே என்னிடம் தந்து விட்டாய்





# பினாங்குத் தீவு!

அலையும் மலையும் கலந்து உறவாடி
அழகிய முத்துத் தீவை உருவாக்கி
கலைகள் கொழிக்கும் பசுமை பொன்னிலமே!
கனிவைப் பொழியும் தூய்மை விளைநிலமே!
அலைபோல் உழைப்பில் அயரா மானிடரால்
அன்பெனும் அணைப்பில் அயர்ந்திடும் தீவிதுவோ?
சிலையில் வடித்த சித்திரக் கன்னிகையோ?
சிரிப்பில் முகிழ்த்த சீதள் நிலவிவளோ?

வானம் தழுவிட வளர்ந்த ''கொம்டாரும்''
வளமார் கடல்மேல் நீண்ட பாலமுமாய்
நானும் நீயும் பினாங்கு மலைமேலே
நலமாய்ச் சென்றிட அமைந்த இரயில்பாதை
மானும் மீனும் துள்ளியே மகிழ்ந்தாடும்
மங்கை முகத்தின் விழிகளைப் போலிங்கே
காணும் அழகில் கருத்தைக் கவர்ந்திழுக்கும்
கடற்கரைப் பசுமை நிறைந்த தீவிதுவே!

மழலைத் தவழும் மலாய் மொழியுடனே
மகிழ்வுறும் சீனமும் ஆங்கிலத் திறனுடனே
எழிலார் என்தமிழ் இணைந்து உறவாடும்
இன்பம் இன்பம் இங்கே கண்டேனே!
பொழிலார் சோலையும் புதுப்புது வளமுடனே
பிணைந்து இணையும் ஒருமை கண்டேனே
அழியாச் செல்வமும் வளரும் தீவிதுவே!
அருளால் ஆளும் பினாங்குத் தீவிதுவே!

---

கொம்டார்: 'KOMTAR' பினாங்கில் உள்ள 64 மாடிகளைக் கொண்ட வணிக வளாகம்.

# நிமிராதோ நம் வாழ்வு!

இருபத்தொன் றென்கின்ற நூற்றாண்டை நோக்கி
இனியதொரு வழிகாண நடைபோடும் முன்னம்
பருவத்தில் இளமையுடன் பாராண்ட தமிழே!
பகைமுகத்துச் செருவெல்லும் படைகொண்ட தமிழே!
இருக்கின்ற உன்னினத்தின் அவலநிலை பாராய்!
இதுசமயம் துயர்துடைக்கத் துடித்தெழுந்தே வாராய்!
உருப்படவே வழியெங்கே? சிந்தனையைச் செலுத்து
உலகமதில் உன்திறனை அறிவியலில் நிறுத்து

துடிதுடித்துச் சாகின்ற தமிழீழ இனமும்
தன்னுரிமை பர்மாவில் இழந்திட்ட விதமும்
இடிபாட்டுக் கிடைச்சிக்கி நசுங்குதலைப் போல
இருக்கின்ற வாழ்விழந்து ஏதிலிகள் ஆனார்!
கடிமனத்துப் பம்பாயும் கன்னடமும் சேர
சொந்தநாட்டின் அகதிகளாய்ச் செந்தமிழர் ஆனார்!
மடிப்பிச்சை கேட்பதற்கோ மண்ணாண்ட தமிழன்?
மடமையிருள் நீக்கியுன்றன் உரிமைநிலை நாட்டு!

தமிழ்பேசித் தமிழ்பேசித் தமிழாலே பிழைத்தோம்
தமிழ்நெஞ்சம் எங்கேசொல்? தேடுகின்றோம் காணோம்!
தமிழெழுதிப் பிழைக்கின்ற வாழ்வுமுறை கற்றோம்
தமிழினத்தைக் காக்கின்ற கடமையதை மறந்தோம்
திமிராடும் சுயநலத்தில் சுற்றமதை மறந்தோம்
தன்மானம் இல்லாத வருவாய்க்கே அலைந்தோம்
நிமிராதோ நம்வாழ்வு? ஓரினமாய்க் கூடி
நெஞ்சங்கள் நிறையட்டும் இனமானம் பாடி!

வாழ்வுக்கு வகைதேடி சுயநலத்தில் பிரிந்து
வானத்து விண்மீனின் கூட்டமதைப் போல
'ஜா'வுக்குப் பின்வந்த ஜாதிக்குள் நுழைந்து
சதிராட்டம் போடுவதேன் சிந்தனையை மறந்து

பூவுக்குள் நாகமது இருத்தல் முறையன்று
புதுமையுடன் தமிழினமே ஒன்றுபடல் நன்று!
காவுக்குள் காய்ந்தநிலா வெளிச்சத்தைப் போல
கொண்டிருக்கும் ஆற்றலதை வீணாக்கல் நலமோ?
குமுகாய அடித்தளத்தைச் சரியாக்கிக் காட்டி
குடும்பமெனத் தமிழினமே ஒன்றாகி வந்து
அமுதான தமிழாட்சி அன்பினிலே மலர
அறியாமை சாதியிருள் அற்றொளியே வீச
அமைப்பான அறிவொளியைப் பகுத்தறிவில் குழைத்தே
அழகான தமிழ்மானம் காத்திடவும் வேண்டும்!
குமுறியெழும் பசிக்கொடுமை புறமோடச் செய்து
குவலயத்தில் அறிவியலை நிலைநாட்ட வேண்டும்!

**(இரண்டாம் உலகத்தமிழர் மாநாட்டு மலர் சென்னை 1993-ல் இருந்து)**



# அமைதிப்புறாவின் அலகுகளில்...

அமைதியிங்கு நிலவிடவே பேச்சுவார்த்தை - அமைதி
அடைந்திடவே வெடிமுழக்கம் போர்படைகள்!
அமைதிப்புறா வானமெங்கும் பறக்கவிட்டார் - அதன்
அலகுகளில் துப்பாக்கித் தொங்கவிட்டார்!

ஒலிவமர இலைகளதின் இடைவெளியில் - விரைவில்
அழிவுதரும் பீரங்கி அடுக்கிவைத்தார்!
வலிவுதரு சமாதான வெற்றிக்காக - அணுவின்
வெடிகுண்டு வெடித்திங்கு அமைதிகாத்தார்!

பசிப்பிணியில் பரிதவிப்போர் ஓலக்குரலும் - அடிமை
பிடியினின்று முழக்கமிடும் உரிமைக்குரலும்
அசைந்தாடும் வெள்ளைநிற கொடியின்கீழ் - நடக்கும்
அமைதிகாணும் பேச்சொலியில் அடங்கிப் போகும்!

அமைதியிங்கு நிலவிடவே பேச்சு வார்த்தை - அமைதி
அடைந்திடவே வெடிமுழக்கம் போர்ப்படைகள்
சுமைதாங்கி மனிதஇனப் பிணத்தின்மீது - அமர்ந்து
தினமுலகின் அமைதிக்காகப் பேச்சுவார்த்தை!





# நாட்டு நலம்

வீட்டுநலன் ஒன்றினையே கருத்தாய்க் கொண்டு
வினையாற்றும் மாந்தருக்கு விளக்கும் வண்ணம்
நாட்டுநலன் பேணுதலில் வீட்டு நலனும்
நல்லடக்கம் ஆகிவளம் கொஞ்சும் என்று
பாட்டுநலன் காத்துவரும் கவிஞர் தம்மை
பல்கவிதை தந்திடவே அழைத்து இங்கு
கூட்டுவித்த வானொலிக்கு வணக்கம் சொன்னேன்!
கேட்டுமகிழ் அன்பருக்கும் வணக்கம்! வணக்கம்!

நாட்டுநலன் பேணுதற்கு வழிகள் என்ன?
நல்லறிவுக் கல்வியது முதலில் தேவை
கேட்டில்விளை அழுக்குமதி அகற்றல் வேண்டும்
கவினுறவே விவசாயம் பெருக வேண்டும்!
வாட்டமுறு வறுமையினை ஓட்டி யிங்கு
வன்முறைகள் இல்லாநல் அமைதி வேண்டும்!
தோட்டத்தைக் காப்பதுபோல் நாடு காத்து
தொழிலாளர் உழைப்புக்கு மதிப்பு வேண்டும்!

எழிலார்ந்த சோலையென எந்தன் நாடு
எப்போது? தலைநிமிர்ந்து நிற்கும் உலகில்!
பழியார்க்கும் தடைகளெல்லாம் பொடியாய்ப் போக
பணியாற்றிக் காத்திடுவோம் நாட்டு நலனே.
இழிவான சமுதாய கேடுகள் நீக்கி
இருள்சூழ்ந்த நெஞ்சத்தில் அருளே ஒளிர

கழிவான கதைகளெல்லாம் கணத்தில் ஒதுக்கி
கனிவான விஞ்ஞான வளர்ச்சி செய்வோம்!

கடத்தல்செய் கூட்டமதைத் தடுத்தல் வேண்டும்
கள்ளவழி பதுக்கலதை ஒழித்தல் வேண்டும்
நடத்தையிலே உறுதிவேண்டும்; நேர்மை வேண்டும்
நாட்டுநலன் காப்பதிலே நாட்டம் வேண்டும்
குடத்தினிலே உள்ளிருக்கும் ஒளியாய் இன்றி
குன்றேறி உனதறிவு ஒளிர வேண்டும்
மடத்தனமாய் ஊர்வதந்தி பரப்பும் வேலை
மனநலனும் கெட்டுவிடும் மகிழ்வே போகும்.

பன்நலமும் பல்வளமும் பெற்றி ருந்தும்
பசியும்ஏன்? பஞ்சம்ஏன்? எந்தை நாட்டில்
மண்வளமும் கனிவளமும் இயற்கை தந்தும்
முடிவில்லா வறுமையிலே உழல்வ தும்ஏன்?
தன்னலத்தில் அவரவர்கள் மூழ்கிய தாலே
தரித்திரத்தில் சரித்திரத்தை மாற்றி விட்டார்
உன்னலத்தில் பொதுநலத்தைக் கலந்து விட்டால்
ஊர்நலத்தில் உயர்வுகொளும் நாட்டு நலனே!
பெண்கொள்ள விலைபேசும் பேடிமை தன்னை
பெற்றதாயி னுக்கேற்படும் களங்கம் என்போம்
பெண்ணடிமை தளைஉடைத்து உரிமைக் காத்தல்
பெருவளமே நாட்டினிற்குப் பெருகி ஓங்கும்
விண்முட்ட கலமேறி செல்லும் முன்னர்
விடியாத அறியாமை விரைந்தொ ழிப்போம்.
பண்பட்ட பகுத்தறிவை வெளியில் கொணர்ந்து
பயனுறவே காத்திடுவோம் நாட்டு நலனே!

உழைப்புக்கு மதிப்புதரும் நாட்டில் தானே
உணவிருக்கும் ஊர்செழிக்கும் உலகம் புகழும்
பிழைப்புக்குப் படிக்கின்ற பட்டம் எல்லாம்
பிணியாளி கையினிலே வெண்ணெய் போலாம்
அழைப்பிற்குக் காத்திருக்க வேண்டாம்! இன்றே
அகமிணைந்து உழைத்திடவே வாராய் தோழா!

மழை பொழிய திரண்டோடும் வெள்ளம் போல
மனத்துறுதி கொண்டிங்கு உழைப்பைத் தாராய்.

திமிராடும் கொடுமைதரும் தடைகள் கண்டால்
தவறாமல் நீக்கியதைச் செம்மைச் செய்வோம்
நமதிந்த நாடென்ற எண்ணம் வேண்டும்
நல்வழியில் தலைமுறைகள் தோன்றல் வேண்டும்.
அமைவான விதிமுறைகள் நாமே செய்து
அழியாத வழிமுறைகள் தோற்றல் வேண்டும்
குமுகாயம் உய்திடவே கொள்கை வகுத்துக்
குடும்பவழி குறள்வழியே காண்போம் நலனே!

வழிவழியே பெரியோர்கள் விட்டுச் சென்ற
வினையாற்றும் பணிகளிலே ஊக்கம் பெற்று
அழியாத வளமனைத்தும் மேலும் ஓங்க
இனநலமும் மொழிவளமும் காத்தல் வேண்டும்
செழிப்பான சமநீதி வாழ்விற் கிங்கே
சமூகநீதி கிடைத்தப்பின் நாடே வாழும்
பொழிலார்ந்த மலர்களென கொள்ளை சுகம்
புதுமையினைச் செய்தலிலே கிடைக்கும் நலனே!





# கவிதைப் பூங்கா

அழகைத்தரு மிளமை மழலைத்தரு மினிமை
பொழிய பொழியத்தரும் தமிழிலே
மொழியில் தனைமறந்து நிழலின் சுக மறிந்து
சுழலும் இலக்கணங்கள் தழுவவே!

நிலவுதரு மெழிலில் குலவுமொரு கிளியின்
நிலையில் மயக்கமுறு நினைவிலே
புலமைதருந் தமிழில் புலவர்தருங் கவிதை
புலரும் புகழினொடுச் சிறக்கவே!
பொதிகை மலைப் பிறந்து மதுரை நகர் தவழ்ந்து
புதுமைப் புதுமையுறு தென்றலில்
மதுரம்நிறைச் சுவையின் மதுவைப்பொழிந் தினிக்கும்
எதுகை மோனைகளே வணக்கமே!

உடையழகும் நடையழகும் விழியின் அழகும்
உடலசைவின், எழிற்கொஞ்சும் உருவின் அழகும்
இடையழகும் இமையழகும் இளமை யழகும்
இடைத்துஞ்சும் ஒயிலழகும் பெண்மை யழகும்
சடையழகும் சுவைசேர்க்கும் மென்மை யழகும்
தடையுடைத்து எழும்நீராய் எழுந்த ஆசை
அடைமழையில் நனைந்ததொரு குளிர் மலராய்
மடிதவழ்ந்து அரும்பி நிற்கும் இன்ப அழகும்.

எடுத்தெடுத்துப் பாடிப்பாடி தொடுத்த நல்ல
எழுத்தோவியக் கவியாக்கம் கண்டு விட்டோம்
படுத்துறங்கும் வேளையிலும் கற்பனை தனையே
பகற்கனவாய் மேயவிட்டோம்; இன்றும் நம்மை
தொடுத்ததந்த போராட்டம் என்றாலே இங்கு
தமிழ்க்கவிதைப் பாக்களிலே படித்து வைப்போம்!
அடுத்தடுத்து வந்த மூன்று அரசும் தோற்கும்
அழகுமிழும் கவிதையிலே இன்பம் சேர்க்கும்.

பிறந்ததுமே தாலாட்டுக் கவிதைப் பாட்டு
பின்னிவரும் அன்னையவள் பாசக் கூட்டு

நிரந்தரமாய் திருமணத்தில் நலுங்குப் பாட்டு
நலம்பாடும் நல்லோரின் வாழ்த்துக் கூட்டு
இறவாத கவிதைகளின் இளமைத் தேக்கம்
ஏலேலோ தெம்மாங்கு உழைப்பின் நாற்று
இறந்ததுமே ஒப்பாரி அழுகைக் கூட்டில்
இங்குள்ள சமுதாயம் கவிதை கூட்டும்!

அடிமைகளின் விலங்கொடிக்கும் போர்வாள், கவிதை
அன்புள்ளம் கொண்டவர்க்கோ தென்றல் காற்று
இடிமுழக்கம் செய்துவந்து வெடியாய் மாறி
இருளறிவைத் தகர்த்துவிடும் கவிதைக் குண்டு
விடியாதா? வாழ்வென்று விடிவைத் தேடும்
விடியாத நெஞ்சங்களின் விழிப்பு ணர்ச்சி
அடியோடு உரிமைகளை நசுக்க வந்த
ஆதிக்கக் காரருக்கோ அந்தி வானம்!



மொழிமாறிப் போகின்ற போதும் கவிதை
மாறாமல் உணர்ச்சிகளின் சங்கமம் ஆகும்
இழிவான துயரறுக்கும் மருந்தாய் கவிதை
இதயத்தில் இதமாகும் இளமை விருந்தே
அழியாத ஆன்மநேயம் மனித நேயம்
அன்பாலே உருவாக்கும் பாசப் பிணைப்பு
பழியாகிக் கிடக்கின்ற பசியும் பிணியும்
பகையாக்கி ஒழிக்கவந்த பகலவன் கவிதை
உலகத்தில் வன்முறைகள் உயரும் போது
உணர்ச்சிமிகு கவிதைகளே உரத்துக் கூவி
கலகத்தில் முடியாமல் காத்து நிற்கும்
குமுகாய விடுதலைக்கு வழியே சேர்க்கும்
விலகட்டும் அறியாமை என்று கூறி
விரையட்டும் உமதுகவி தொடர்ந்து நன்றே
பலகற்றும் கல்லார்போல் பயனே அற்றோர்
பகைமுடிக்க வரலாற்றுக் கவிதைச் செய்வீர்

அவரவர்க்கோர் தனிக்கொள்கை கொண்ட தாலே
ஆளுக்கோர் தலைவனிங்குத் தனியாய் உண்டு!

சுவருக்கேன் சுண்ணாம்பு என்று கேள்வி
சளைக்காமல் கேட்பதிலே பிரிந்து நிற்பார்
தவறுக்கும் தனிவிளக்கம் தந்து இங்கு
தத்துவங்கள் ஆக்கிடுவார் பெருமை கொண்டு
எவருக்கும் அஞ்சாத பேச்சு வீரர்
எதனிடத்தும் தனிமையிலே பயமே கொள்வார்!

பெண்ணடிமை கொள்வதிலே பெருமை என்பார்
பெண்ணுக்குப் பிள்ளைக்கொடை பிடுங்கித் தின்பார்
பெண்ணவளின் கூந்தலையே அவிழ விட்டு
பேயென்றும் சாமியென்றும் ஆட்டி வைப்பார்
முன்னேற்றும் கல்வியதைக் கற்ற பின்னும்
மூடத்தனம் மனத்திரையில் கிளைக்க விட்டார்
எந்நாடு எம்மொழியே என்ற எண்ணம்
இல்லாமல் இருட்டினிலே சிக்கி நிற்பார்!

எத்தனையோ தத்துவங்கள் தோன்றி இங்கு
எழுச்சிமிகு வளர்ச்சியிலே கொள்ள வைத்தும்
புத்தர்களும் சித்தர்களும் சொன்ன நல்ல
புத்திகளைச் சித்திகளைக் கேட்டுக் கேட்டும்
இத்திரையில் மெத்தபுகழ் கொண்ட துண்டா
புத்தகத்தில் இக்கருத்தை எழுதி வைத்து
நித்திரையில் ஆழ்ந்துவிட்டார் சுயந லத்தில்
நாடுயிங்கு வீழ்ந்ததாலே நலிவே கொண்டார்!.

அடுக்கடுக்காய் சாதிகளைச் சொல்லிச் சொல்லி
அதற்கெனவே தலைவர்களை அள்ளித் தள்ளி
இடுக்காட்டில் புதைக்குழிக்குள் மனிதர் தம்மை
இறுத்திவிடும் தலைமைக்கே புகழே பாடி
மிடுக்காகத் திரிவோர்கள் கூட்டம் இங்கே
மகிழ்கின்ற மமதையது ம்றையும் வண்ணம்
துடுக்காக மிளிர்கின்ற இளைஞர் படையே
துடித்தெழுந்து பணியாற்ற வருவ தெப்போ?

காதலுக்கு கவிப்பாடி களைத்து போனோம்
கற்பனையில் விளையாடி சளைத்துப் போனோம்!
வேதனைக்குள் போராடும் மனிதர் தம்மை
விடுவிக்கும் கவிபாட கவியே வா! வா!
சாதனைகள் புரிந்திடுவோம் கவியால் இன்று
சரித்திரத்தில் தரித்திரத்தை ஒழிப்போம் நன்று!
வேதனைகள் நிறுத்திடுக! புயலாய்த் தோன்றிப்
பசியையும் பிணியையும் கவியால் வெல்வீர்!

கருப்பென்றும் வெளுப்பென்றும் பேதம் இல்லை
கவிஞர்க்கு உலகென்றும் அன்பின் எல்லை
நிறுத்துங்கள் திருத்தங்கள் தேவை இல்லை
நிலையான நீதியே அமைதிக் கெல்லை
அறியாமை அழிந்திடவே கவிகள் செய்வீர்
ஆன்மநேயம் மனிதநேயம் தழைக்கச் செய்வீர்
வறியோர்கள் செல்வர்கள் வேற்றுமை எல்லாம்
விஞ்ஞானப் புதுமையிலே மறையச் செய்வீர்!

ஊனின்றி வறுமையிலே மழலைக் கூட்டம்
உலகினிலே சாவதற்கோ படைப்புக் கொள்கை
ஏனென்றும் எதற்கென்றும் கேள்விக் கணைகள்
எழுச்சிமிகு கவிதையிலே தொகுத்து விழும்
வானின்று மமதையே புயலாய்ச் சீறி
வதைக்கின்ற இயற்கைதரும் விபத்தின் தோற்றம்
ஞானமிகு விஞ்ஞான வழியில் வெல்வோம்
ஞாலமது அமைதியிலே மலரக் காண்போம்?

படைப்பினிலே பிறப்பினிலே பேதம் சொன்னால்
படைகொண்டு அடுக்கிவரும் கவிதை வீச்சு!
உடைப்பினிலே போடுகின்ற கொள்கை எல்லாம்
உலகத்தில் நடமாட விட்டுவிட்டு
நடைப்பிணமாய் வறுமையிலே மனித இனத்தை
நாகரிகப் போர்வைக்குள் பதுக்கி வைக்கும்
மடத்தனத்தைக் கண்டாலே பொங்கிச் சீறி !
மனிதகுலம் தழைப்பதற்கு வழிகள் சொல்லும்!

உரிமைக்குக் குரலெழுப்பி கவிகள் செய்வீர்!
உண்மைக்கு ஒளிகாட்டும் வழிகள் செய்வீர்!
சரியாத சமவாழ்வை அன்பால் இங்கு
திறமாகச் செயலாற்றும் கவிகள் செய்வீர்
எரிசருகு மனிதவாழ்வு என்ற போதும்
பாரெங்கும் உறவாட கவிகள் செய்வீர்!
புரியாத புதிர்நீக்கி உலக வாழ்வைப்
பாரெங்கும் ஒருமையுற கவிகள் செய்வீர்!

**(சென்னை வானொலியில் பாடியது)**



# இனியுமொரு பிறப்பெடுப்பாய்

"வைரமல



சத்தியத்தின் சோதனைக்குள்
சாதனைகள் பலபுரிந்த
சாந்திநிறை காந்தி பெருமான்

சந்தமும் அடிமையெனும்
சங்கிலியை உடைத்தெறிந்து
சுதந்திரம் கண்ட பெருமான்

கைத்தடியைக் கையெடுத்து
கேள்விகுறிப் போல் வளைந்து
களம்புகுந்து வென்ற தீரன்!

கண்ணசைவில் இந்தியத்தைக்
கட்டிவைத்து விடுதலையை
வென்றுதந்த வெற்றி வீரன்!

மனிதயினம் ஒருமையுற
மனமதிலே மகிழ்வுகொள
முறையான நெறிசொன்ன நிலவே!

இனியுமிது புதுமையுற
இந்தியமே இனிமையுற
இனியுமொரு பிறப்பெடுப்பாய் மலரே!

கண்மூடி வழக்கமெலாம்
மண்மூடி போகசொன்ன
கனிவான வள்ள லாரும்

கண்ணான தத்துவங்கள்
கவிதையிலே பாடிசொன்ன
மாயூரம் வேத நாயகர்

சன்மார்க்க மதங்களிலே
சமரசத்தை விளக்கிநன்கு
சமநீதி சொன்ன போதும்

தொடுவானம் தேடுகின்ற
தெளிவறியா நெஞ்சங்கள்
தடுமாறி நிற்கும் வேளை

அடிமைநிலைப் பொடிபடவே
விடுதலையைத் திடமுடனே
வெற்றிகண்ட காந்தி அண்ணலே!

கெடுமதியர் கொடுமைகளைக்
களைந்திடவே மறுபடியும்
உருவெடுத்து வருக நிலவே!

கடவுளுக்கும் மனிதனுக்கும்
கனிவான நெறிமுறையைக்
காட்டுதற்கு வந்த மதங்கள்!

கல்லெறிந்தும் சொல்லெறிந்தும்
குழப்பத்தில் வீழ்ந்து நின்று
குரங்குக்கை மாலை யாகி

மடமையிருள் மூடிவிட
மனிதஇனம் ஒன்றென்ற
மகிமைதனை மறந்து நின்று

வெறுங்கோயில் பித்தராகி
வெறிபிடித்து அலைந்திங்கு
பதவிசுகம் தேடும் வேளை!

கொடியர்மதி பொடிபடவே
அடிமைதளை விலங்கொடித்து
விடுதலையைப் பெற்ற அண்ணலே!

கெடுமதியர் கொடுமைகளைக்
களைந்திடவே மறுபடியும்
உருவெடுத்து வருக நிலவே!

வான்கொண்ட ஈசுவரன்
அல்லாவும் ஒன்றென்று
வணங்கியே சொன்ன போது

வெறிநாயின் துப்பாக்கி
வெடித்ததே உன்னெஞ்சில்
வெற்றுரைகள் இனியுமேனோ?

ஆண்டவனின் படைப்பினிலே
அனைவருமே பொதுவென்ற
அடிப்படையை மறந்து நின்று

ஆத்திகத்தை வளர்க்க வந்து
ஆத்திரத்தை வளர்த்ததினால்
நாத்திகத்தை வளர்த்தார் நன்று!

மனமதிலே உலவிவரு
அமைதியெனும் நிலையோடு
அகிம்சையை கண்ட மலரே!



மனமூலவும் மதவெறியை
விரைவினிலே நொறுக்கிவிட
மீண்டும் நீ வருக நிலவே!

வீண்முயற்சி என்றுகூறி
வல்லவர்கள் அவைகூடி
விளக்கங்கள் தந்த போதும்

விளையாட்டாய் கருதியன்று
வினையாக்கி காட்டிமக்கள்
மனதினிலே இடம் பெறவே

''தீன் இலாஹி'' என்ற பேரில்
மும்மதத்தை ஒன்றாக்கி
அக்பரவர் முயன்ற போது

தீயாக வெடித்தெழுந்துத்
தீராத பெரும்பகையால்
தோல்வியே கண்டார் அன்று!

மனமதிலே மகிழவரு
மதியுலவு அறிவொளியை
மறுபடியும் பெற்று தரவே!

முகமதிலே சாந்தியொளி
மலர்ச்சியுற மலர்ந்திடவே
மீண்டும்நீ வருக அண்ணலே!

மனிதயின நல்லிணக்கம்
மனநிலையில் கொண்டால்தான்
மகிழ்ச்சியங்கு மலரும் நன்கு!

மதங்களிடை நல்லிணக்கம்
மலர்ச்சிபெற விளைந்திடவும்
மனிதமனம் இணைந்தால் போதும்!



புனிதமிகு பாதையென
புனிதனென்னும் காந்திவழிப்
புதியவழி என்று தேடு?

பணிகளிடை அமைதிவழி
பலறறியும் காந்திநெறி
பண்பாடும் வழியென்று பாடு!

பழகுதமிழ் ஒழுகிவர
பழமுதிரும் அமுதமென
புகழுலவும் காந்தி அண்ணலே!

நிலவுலகில் இந்நிலத்தை
நிலைப்பெறவே வழி யமைக்க
மீண்டும் நீ வருக மன்னனே

# நான் சுதந்திர மனிதன்

நான் சுதந்திர மனிதன்
நாற்பத்தேழு ஆண்டுகள் சுதந்திரக்
காற்றில் உலா வருபவன்!
சுதந்திரமாகச் சிந்திக்கிறேன்!
என் நாடு, இன்றைக்கு என்ன ஆச்சு?

அரசியலில் அதிகம் குழம்பியதால்
திரைப்பட வாசலில் தூங்கிக்கிடக்கிறதே!
வந்தார்க்கெல்லாம் பாய்விரித்துப் போட்டு
வகையாக கைகட்டிச் சேவகம் புரிகிறதே?
தனக்குத்தானே எதிரியாக மாறி காட்டிக்
கொடுக்கும் கலையைக் கற்றுக்கொடுத்தது யார்?
மொழிப்பற்றும் இனப்பற்றும் கூடவா
மதுக்கிண்ணத்தில் கரைந்து போக வேண்டும்?
சிந்திக்கிறேன்... சுதந்திரமாகச் சிந்திக்கிறேன்
சிந்தித்ததைச் சொல்ல நினைக்கிறேன்!
என் வாயை ஊமையாக்கியது யார்?
எழுத நினைக்கிறேன்
என் கைகளுக்கு விலங்கிட்டது யார்?
என் எதிரே நின்று அடிமைகொள நினைக்கும்
பயங்கரந்தான் என்ன?
என்னால் சுதந்திரமாகச் சிந்திக்க மட்டுமே முடிகிறது!
நான் சுதந்திர மனிதன்!



# சொந்த நாட்டின் அகதிகள்..!

பர்மா தமிழர் பரிதவிப்பைப்
'பிசினசாக' மாற்றி விட்டோம்!
ஈழத் தமிழர் ஓலமிட்டார்
எங்கள் செவியை
மூடிக்கொண்டோம்!

கன்னடத் தமிழர் உதைப்பட்டார்
பாம்பே தமிழர் எரிகின்றார்
என்னடா கொடுமை எனக்கேட்க
எமக்கே நேரம் போதவில்லை!

திரைப்படக் கொட்டகை
வாயிலிலே
தோரணம் கட்டிடும் ரசிகர்கள்
திருவிழா உண்டியல் தூக்கிடும்
தெருவோர கோயிலின் பக்தர்கள்

சாதி சாதிக்கொரு மன்றமதைச்
சந்துக் கொன்றாய் அமைத்திடும்
ஆதி நிலைகளை மறந்திட்ட
அடிமைத் தமிழர் நாங்கள்தான்!

பணமா? காசா! சொல்லுங்கள்
பல்லையிளித்துப்
பின் தொடர்வோம்!
இனமா? மானமா? என்ன அது?
எங்களைக் கேட்டால்
என்செய்வோம்?

எந்த நிலையிலும் மாறாத
எடுப்பார் கைப்பிள்ளைகள்
சொந்த நாட்டின் அகதிகளாய்ச்
சூழ வந்திடும் தமிழர்கள்.



# பூகம்பமே! புறப்பட்டு வா...! .

மதம் வெறியாகி வெடிகுண்டுகளோடு
நிற்கின்றது!
சாதிகள் கொழுந்துவிட்டெரிய
சமயம் பார்க்கிறது!
மனிதன் தன்னிலை இழந்து சாம்பலாகத்
தயாராகிக் கொண்டிருக்கிறான்!
ஈரோட்டுக் கதிரவனே!
உன் சூரிய சக்திகளின் ஒற்றுமைக்
குழப்பத்தால் அறியாமைக் குப்பைகள்
உயரே பறந்து ஆலவட்டம் போடுகிறது - இன்று
மற்றவர்க்குக் குற்றேவல் செய்தேனும்
குடல்வளர்க்கும் குருட்டாட்டம் நிறைந்துவிட்டது
மானத்தை மறந்து,
சிந்திக்க மறுத்து மூடநம்பிக்கைகளின்
முடை நாற்றத்தில் சமுதாயமே மயங்கிக் கிடக்கிறது
விழிப்புணர்வு பெறமீண்டும்
பூகம்பமாகப் புறப்பட்டுவா! உன் பிரச்சார
பீரங்கிகள் புயலாய்ச்
சீறியெழ முடுக்கி விடு!



# சுதந்திரத்திற்குத் தேவை சுதந்திரம்?

ஆகஸ்டு 15
நான் பிறந்த நாள்!
ஓ... அண்ணல் காந்தியே!
போராட்டக் களத்தில் என்னைப் பெற்றெடுக்க
தலைமை வகித்தவன் நீயா?
அதனால்தான்!
துணிகளால் தோரணங்களும் கொடிகளும் கட்டி
என்னையும் உன்னைப்போல்
அரை நிர்வாணமாக்கி விட்டார்களா?
‘ஈசுவர அல்லா தேரே நாம்’ சொன்னதற்காக உன்னை
ஒரே குண்டில் கொன்றானாம் மதவெறியன்.
இன்று என் உடலை அதே மதவெறிக் கும்பல்
வெடி குண்டுகள் வைத்துத் தகர்த்துக் கொண்டிருக்கிறது.
வறுமைக் கோட்டிற்குக் கீழே
நான் துடித்துக் கொண்டிருக்கிறேன்.
தகுதி, திறமையோடு, ஊழல்
பெருத்துக் கொண்டிருக்கிறது
ஒருமைப்பாட்டை உணவாக உண்டு வளரும் நான்
தண்ணீருக்கே தவமிருக்கும் நிலை!
வன்முறை, அடக்குமுறை இவைகளால்
ஊமையாகிச் சாதி சாக்கடைக்குள்
புதைந்து கொண்டிருக்கிறேன்.



ஐயனே!
என் தளைகள் எல்லாம் பொடி படவேண்டும்!
விலங்குகள் அறுபட வேண்டும்! ஆம்!
இந்தச் சுதந்திரத்துக்கே தேவை
மீண்டும் ஒரு சுதந்திரம்.
அப்போதுதான் என் மூச்சுக் காற்றைச்
சுதந்திரமாகப் பயன்படுத்த முடியும்!

# நீல் ஆம்ஸ்ட்ராங்க்

நிலா... நிலா... ஓடி வா! - என
குழந்தைகளுக்கு நாங்கள்
நிலாவைக் காட்டிக் கொண்டிருக்கும் போதே
நீ!
நிலாவில் நடந்து உலா வந்து விட்டாய்!

இராகு, கேது என்ற பாம்புகள்தான்
நிலாவை விழுங்குவதாக நாங்கள்
இன்னமும் நம்புகிறோம்,
உன்னை அவைகள் விழுங்காமல்
விட்டதுதான் எங்களுக்கு ஆச்சரியம்!

நிலாவில் நீ நடந்த நாளை
உலகம் விழாவாகக் கொண்டாடுகிறது!

நாங்களோ, நிலா மாதாமாதம் தேய்ந்து
வளர்வதாக எண்ணி தேய்பிறையும்
வளர்பிறையும் கணக்கெடுத்துக் கொண்டிருக்கிறோம்!
நீல் ஆம்ஸ்ட்ராங்க்!

நீ நடந்து சென்ற விஞ்ஞானப் பாதையை
பின்பற்றி நாங்களும் ஓர்நாள் நிச்சயம்
நிலாவில் நடப்போம்.

ஆனால் இப்போது!

எட்டாம் மடத்தில் அமர்ந்திருக்கும்
சந்திரனின் மேல் ஏதோ ஒன்றின்
பார்வைப் பட்டதாலே...

எங்களுக்கு நேரம் சரியில்லை!
எங்கள் ஊர் சோதிடர்களே சொல்லி விட்டார்கள்!
அதுவரை!
நாங்கள் நிலாவைக் காதலுக்குக் தூது
விடுவோம்.
பின்னர்
நிலாச் சோறுதான்.



# ஓ... மனிதா!

நஞ்சுக் கொடியை அறுத்துக்கொண்டு
வெளியே வந்து...
ஆசைக்கொடிக்குள் அல்லவா
சிக்கிக் கொண்டாய்!

சொர்க்கத்தின் தளபதியாய்ப் பிறந்தவனே
இறக்கும்போது நரகத்தின் அதிபதியாய்
எப்படி ஆனாய்?

தாயின் வயிற்றிலே பசியா வரம்
பெற்றவன் நீ...
வெளியே வந்து விழுந்ததுமே...
பசியின் கொடுமைக்குள் அல்லவா
சிக்கிக் கொண்டாய்...!
நீ கால்களை உதைத்து உல்லாசமாக
வாழ்ந்த தாயின் வயிற்றைச்
சிறையென்று எண்ணி விடுதலை
பெறத்துடித்து வெளியே வந்தாய்...
வந்ததுமே!
மீளமுடியாத வாழ்க்கைச் சிறையில்
அல்லவா மாட்டிக்கொண்டாய் ?



நீ பசியாதிருக்க தன் உதிரத்தையே
தந்ததே தாய்மை...
இன்று... அந்தத் தாயும் உன்
உடன்பிறப்புகளும் பசித்திருக்க
நீ மட்டும் உண்டு களிப்பது ஏன்?
அன்று தாயின் உதிரத்தையே
உறிஞ்சியதால் தான்
இன்று ஏழைகளின் இரத்தத்தை
உறிஞ்சப் புறப்பட்டுவிட்டாயா?



# பெண்கள்

பிறப்பிலிருந்து கல்யாணம் வரை
பெற்றோரின் அடிமையாயிருந்து
கல்யாணத்தில் துவங்கி
கணவரின் அடிமையாயிருந்து
பிள்ளைகள் வளர்ந்ததும்
அவர்களின் அடிமையாகித்
தொண்டுகிழமாகி மயானம்வரை
சுதந்திரத்திற்காகவே ஏங்கி ச்
சுதந்திரமேயில்லாமல் சாகும்
சுதந்திர இந்தியப் பிரஜைகள்!

# தடங்கலுக்கு வருந்துகிறோம்!



தொலைக் காட்சியும்
வானொலியும்
இயக்குவது யார்?
அந்தந்த நிலையங்களா?
இல்லை! இல்லை!
நம்ம ஊர் மின்சார
வாரியம் தான்!



# மே நாள்

இரத்தம் சிந்தி பெற்ற உரிமை
எட்டுமணி நேர உழைப்பு!
இன்று அதற்கும் மேலே 'ஓவர் டைம்'
கிடைத்தால்தான் எங்கள் வீட்டு அடுப்பெரியும்.

'மே' நாள் இன்று விடுமுறையா?
இல்லை... இல்லை... இது ஒருவிதிமுறை!
பறக்கும் விலைவாசியைப் பிடிக்க
எமக்கோ இறக்கை இல்லை!

அதற்காகவே
உழைப்பு! உழைப்பு!
இருபத்து நான்கு மணி
நேரமும் உழைப்பு!
''செய்யும் தொழிலே தெய்வம்!''
பிழைக்கத் தெரிந்த வர்க்கம்
சொன்னது இதற்குத் தானா?



# அரசியல்

சிறைக் குற்றவாளிகள்
சிம்மாசனம் ஏறிய
காரணத்தால் தான்
சிறைக் கதவுகள் அடிக்கடி
திறந்து விடப்படுகின்றதோ!





# பக்தர்கள் சண்டை!

குடிக்கக் கூழில்லாதவனும்
கட்டத் துணியில்லாதவனும்
இருக்க இடம் வேண்டிச்
சண்டையிட்டு மண்டைகள் உடைகிறது!

அவர்கள் குடியிருக்கவா?
இல்லை! இல்லை!
பாருக்கே படியளக்கும்
பரந்தாமன் ஒருசின்ன
கோயிலுக்குள் குடியிருக்க!
சுரண்டியே கொழுத்திட்ட
சிலசுகபோகிகள்
இவர்களுக்கு ஆயுதங்கள்
'சப்ளை' செய்கிறார்களாம்
சண்டை தீவிரமடைந்தால்
தங்களின்
அரசியல் பதவிகளைத்
தக்கவைத்துக் கொள்ள!

அடுத்து
கடவுள்களே நேரில்வந்து
சண்டைசெய்தால்
நலமாயிருக்கும்!
பக்தர்களின் உயிர்களையாவது
காத்திடலாம்!

## வரதட்சணை

என்னை வளர்த்துப்
படிக்க வைத்து
ஆளாக்கியதற்கான
செலவை என் பெற்றோர்கள்
வசூலிக்கும் கஜானா!





## கட்டாய வசூல்...

கொள்ளையர்களே!
வழிப்பறிக்காரர்களே!
வீணாகச் சட்டத்தை மீறி
சிறைக்குச் செல்லாதீர்!
நாட்டு நடப்பை யறிய
நடுத்தெருவில் வந்து பாருங்கள்!
கோயிலில் திருவிழாவாம்
வாகனங்களில் செல்வோரை
வழிமறித்து வழிப்பறி செய்யும் பக்தர்கள்!

படிக்கச் செல்லும் பிள்ளைகளிடம்
படிப்பைக் காட்டிப் பணத்தைப்
பிடுங்கும் கல்வி வியாபாரிகள்!

சேவை செய்யவும், இரசிகர்
மன்றம் அமைக்கவும்
நல்ல நினைவெழும் போதெல்லாம்
வசூல்! வசூல்! கட்டாய வசூல்!!





# காதல் சோதனை

அன்று
சீதை இறங்கினாளாம்
தீக்குழியில்
கற்பைச் சோதனையிட!
இதோ!
நாமிருவருமே இறங்கிவிட்டோம்
சமுதாயத் தீக்குழியில்
காதலைச் சோதனையிட!

# ஆழம்!

மூச்சடக்கி முத்தெடுக்கும்
ஆட்களை அழைத்துவா!
மூழ்கியெழும் நீர்மூழ்கிக்
கப்பல்களை இழுத்துவா!
ஆழ்கடலில் மூழ்கி
அளவெடுக்க அல்ல
பெண்களின் மனதின்
ஆழத்தைக் கண்டுபிடிக்க!



# ஏமாளிக் கவிஞன்

கனவுகளைக் கவியாக்கி
காசாக்குவதில் கெட்டிக்காரனான
கவிஞன்
நாட்டைத் திருத்தப் போவதாகக்
கவியெழுதி
தன்னைத்தானே ஏமாளியாக்கிக்
கொள்வது ஏன்?



# லஞ்சம்

நான் பிறக்குமுன்னும்
பிறந்த பின்னும்
படிக்கும் போதும்
வளரும் போதும்
வாழ்வில் வேலைதேடும் போதும்
திருமணச் சந்தையின் போதும்
மரணம் வரைக்கும்
தருவதும் பெறுவதும்



# எது முக்கியம்...?



மனிதனா நமக்கு முக்கியம்?
இல்லை, இல்லை - அவன்
ஜாதிதான் நமக்கு முக்கியம்!

மானமா நமக்கு முக்கியம்?
இல்லை. இல்லை - அடிமை
பிழைப்புதான் நமக்கு முக்கியம்!

சோறா நமக்கு முக்கியம்?
இல்லை, இல்லை - புதுப்புது
சினிமாதான் நமக்கு முக்கியம்!

நாடா நமக்கு முக்கியம்?
இல்லை, இல்லை - அந்த
மதந்தான் நமக்கு முக்கியம்!

கடவுளா நமக்கு முக்கியம்?
இல்லை - இல்லை - வெறும்
கோயில்தான் நமக்கு முக்கியம்

தமிழா, நமக்கு முக்கியம்?
இல்லை, இல்லை - அதை
வைத்துப் பிழைப்பதே முக்கியம்.

எதுதான் முக்கியமெனத் தெரியா
எருமைகள் வாழ்விது - எனக்கூறி
பகுத்தறிவின் வழித்தடம் பற்றிடுவீர்!

பின் அட்டையில்

முனைவர் கவிஞர் இ. முத்தெழிலன் அவர்களுடன்

★ தமிழினத் தலைவர்
டாக்டர் கலைஞர் அவர்கள்

★ மாண்புமிகு அமைச்சர்
சாந்தாராம் பொதுகே (நிதி, மாநிலம்) அவர்கள்

★ மக்கள் தலைவர்
ஜி.கே. மூப்பனார் அவர்கள்

★ மாண்புமிகு அமைச்சர்
டாக்டர் மன்மோகன்சிங் (நிதி) அவர்கள்

★ மாண்புமிகு அமைச்சர்
டத்தோ ஸ்ரீ டாக்டர் சாமிவேலு அவர்கள்

★ டாக்டர் எம். கோபாலகிருஷ்ணன் அவர்கள்
(தலைவர், இந்தியன் வங்கி)

★ திருமிகு ஆர். என். மல்கோத்ரா அவர்கள்
(தலைவர், மத்திய ரிசர்வ் வங்கி)

★ தாய்லாந்து நாட்டுக் கல்வி அமைச்சர் அவர்கள்



